



ஸ்ரீ:

ஸ்ரீமதே ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே ஆதிவண் சடகோப யதீந்த்ர மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ வேதாந்ததேசிக யதீந்த்ர மஹாதேசிகாய நம:

ஸ்ரீமதஹோபிலமடம் 40-வது பட்டத்தையலங்கரித்த
ஸ்ரீவண்சடகோப ஸ்ரீரங்கநாதசடகோப யதீந்த்ரமஹாதேசிகன்
பூர்வாச்ரமத்தில் அருளிய

# ஸ்ரீ பாஷ்யார்த்த மணிப்ரவாள தீபிகையின்,

தமிழ்க்கருத்தாக்கமான
சொக்கனூர் வித்வான் Dr. எஸ். வி. நரஸிம்ஹாச்சார்யர், M. A., Ph. D. இயற்றிய

# ஸ்ரீ பாஷ்யார்த்த தீபிகை

**இரண்டாவது அத்தியாயம்**

1989

## இரண்டாம் அத்தியாயம்

ஸ்ரீமத்சடாரி நிகமாந்த குருத்க யோகிராஜஸ்ய பூர்ணக்ருபயா
விநிவேத்யமானே 1
ஸ்ரீ பாஷ்யபாவமுகுரே ப்ரதமாவஸானே ஒஅத்யாயே த்வீதீய இஹரச்யத
ஈசத்ருப்த்யை ll

### ஸ்ம்ருத்யதிகரணம் (2. 1. 1)

இதுவரை ஸர்வ வேதாந்தங்களும் அகில ஹேயப்ரத்னீக கல்யாண கதானஸ்வரூப ஸ்ரிய: பதியான பரமபுருஷன் ஸ்ரீமந் நாராயணன் என்று அவனது - பரத்வத்தை வெளிப்படுத்தி காரணத்வம் நிரூபிக்கப்பட்டது. அது எந்த ப்ரமாணத்தாலும் பாதிக்கத்தக்கதன்று (அபாத்யத்வம்) என்ற அம்சம் இந்த இரண்டாம் அத்யாயத்தாலே நிரூபிக்கப்படுகிறது.

இதில் முதல் இரண்டு பாதங்களில் காரணபூதமான பரப்ரஹ்மம் பற்றி பூர்வபக்ஷிகளால் கூறப்படும் பாதகங்களும் பரிஹரிக்கப்படுகின்றன. பின்னுள்ள இரண்டுபாதங்களில் ( வியத்பாதம், ப்ராணபாதம் ) கார்யத்வத்தை ஹேதுமாகக் கொண்டு வரும் விரோதத்தை வேதாந்த வாக்யங்களுக்கு பரஸ்பரம் முரண் பாட்டை நீக்குவதன் வாயிலாகப் பரிஹரிக்கிருர் என்று ஸங்கதி.

முதலத்யாயத்தின் முடிவில் இரண்டுவகை ஸாங்க்யர்களும் கண்டிக்கப் பட்டனர். ஆகையால் முதலில் இங்கு ஸாங்க்யன் வேதாந்த விரோதத்தைச் சொல்கிருன். அடுத்தபடி யோக வாதீ என்று இங்கு அதிகரண ஸங்கதி.

### 135 (ஸூ) ஸ்ம்ருத்யநவகாச தோஷப்ரஸங்க இதி சேந்ந அன்யஸ்ம்ருத்யந வகாச தோஷ ப்ரசங்காத் (1)

முன் கூறப்பட்ட - பரமபுருஷனே காரணம் என்ற விஷயம் கபிலர் முதலியோரின் ஸ்ம்ருதிகளோடு விரோதத்தால் மாற்றிவிட — விலக்கிவிடத் தக்கதா இல்லையா என்று சங்கை. விலக்கத்தக்கதே யென்பது சாங்க்யர்களின் பூர்வபக்ஷம். ஏனெனில், ச்ருதி விருத்தமான அர்த்தம் கொண்ட ஸ்ம்ருதி ஆதரிக்கத்தகாதது என்று பூர்வ மீமாம்ஸையில் ஸ்திரப்படுத்தப்பட்டிருந்தாலும், வேதாந்தார்த்தம் எளிதில் அறிய முடியாததாதலின், ஆப்தரான கபிலராலே அருளப்பட்ட கேவலம் தத்வப்பிரதிபாதனம் செய்யும் சாங்க்யஸ்ம்ருதி கொண்டே வேதாந்தார்த்தங்களை நிர்ணயம் செய்யவேண்டும். அவ்வாறு இல்லாவிட்டால் கபில ஸ்ம்ருதிக்கு முற்றிலும் வையர்த்யம் (பயனற்றதன்மை) ஏற்படும் என்ருர்கள்,

*ஸ்ம்ருதி அநவகாச தோஷப்ரஸங்க: இதிசேந் ந*—கபிலஸ்ம்ருதிக்கு இடமே யில்லையென்ற தோஷம் வந்துவிடுமேயென்றால் அதல்ல. ஏனெனில், கபிலர் கூறிய ப்ரதானம் ஜகத் காரணம் என்பது தகாது. ஏனெனில், ஆப்த தமர்களான பல மகர்ஷிகள் அருளிய வேறு-வேதாந்தார்த்தத்திற்கு முரணில்லாத பற்பல ஸ்ம்ருதிகளுக்கு இடமில்லாமையென்ற அதே தோஷம் வந்துவிடும். ஆதலின், அதன்று என்கிறோம். அவற்றிற்கு எப்படி இடமில்லாமை ஏற்படும்? மனுஸ்ம்ருதி, முதலியவை தர்மாதிகளை விளக்குவதால் அவகாசமுள்ளவையாகலாமே என்றால் அந்த தர்மங்களும் பரம புருஷாராதனார்த்தங்களே என்று 'இஷ்டாபூர்த்தம் பஹுதாஜாதம்' ஜாயமானம் விச்வம் பிபர்த்தி, புவனஸ்ய நாபி: ததேவாக்னிரிதி யஜ்ஞைஸ்த்வ மிஜ்யஸே நித்யம் ஸர்வதேவமயாச்யுத இது முதலிய ச்ருதிஸ்ம்ருதிகளால் சித்திப்பதாலும், 'ஆஸீதிதம் தமோபூதம்' எனத்தொடங்கி,

"ஆபோ நாரா இதி ப்ரோக்தா: ஆபோவை நரஸூநவ: ।
தா யதஸ்யாயனம் பூர்வம் தேந நாராயண: ஸ்ம்ருத: ॥

"விஷ்ணோஸ் ஸகாசா துத்பூதம்" என்றிதுபோன்ற மநு - பராசர ஸ்ம்ருதிகளால் பரமபுருஷனே ஜகத்காரணனென்று ஸித்திப்பதாலும் பரம புருஷனுக்குக் காரணத்வம் சொல்லாவிட்டால் மன்வாதிஸ்ம்ருதிகளுக்கு இடமே இல்லையென்ற தோஷம் வருமென்பதாம்.

இந்த்ரியங்களுக்கு புலப்படாதவற்றை ஸாக்ஷாத்கரிக்க வல்லவர் கபிலர் ஆதலின், அவருக்குத் தோன்றாத ப்ரஹ்ம காரணத்வம் கூடாதென்று மேலே தோன்றும் சங்கைக்கு உத்தரம் கூறுகிறார்.

## 136 [ஸூ] இதரேஷாம் சாநுபலப்தே: [2]

வேதார்த்தங்களை ஸாக்ஷாத்கரிக்க வல்லவர்களாய் "யத்வை கிஞ்சந மனுரவதத்தத்பேஷஜம்" என்று ச்ருதியில் ப்ரசித்தரான மனுபோன்றோருக்கு ப்ரதானம் காரணம் என்பது தோன்றாமையாலே வேதாந்தார்த்த விருத்தமான கபிலரின் ஸ்ம்ருதி அல்லது தோற்றம் ப்ராந்தியை மூலமாகக் கொண்டது என்பது கருத்து.

## யோகப்ரத்யுக்த்யதிகரணம் [2]

## 137 [ஸூ] ஏதேந யோக: ப்ரத்யுக்த: [3]

வேதாந்தங்களுக்கு ஹிரண்யகர்ப்பனால் அருளப்பட்ட யோகஸ்ம்ருதி ப்ரமாணமா அல்லவா என்பது சம்சயம். ப்ரமாணமே - ஏனெனில், முழுவேதங்களையும் ப்ரவர்த்திப்பித்த ஹிரண்யகர்ப்பன் (ப்ரஹ்மதேவன்) அருளியதாலும்

யோகஸ்ம்ருதி பகவானை ஏற்றுக்கொள்வதாலும் என்பது பூர்வபக்ஷம். ஆகவே யோகஸ்ம்ருதிப்படி ப்ரதானமே காரணமாகும்./ (உபாதாநம்) ஈச்வரன் நிமித்த காரணமே என்ற பூர்வபக்ஷத்தை நிரஸனம் செய்கிருர். அந்த ஸூத்ரத்தாலே. (ஸூ) *ஏதேந யோக: ப்ரத்யக்தக:* கபிலஸ்ம்ருதிக்குக் கூறிய முறையால் யோக ஸ்ம்ருதிக்கும் வேதாந்த வாக்யங்களுடன் விரோதம் வருவதால் அதுவும் ப்ரமாணமில்லையென்று கூறப்படுகிறது. சதுர்முகனுலும் ஜீவனே யாதலின் அவருக்கு ஏற்பட்ட தோற்றமும் ப்ராந்தியை மூலமாகக் கொண்டதே யென்பதாம்.

## 3 நவிலக்ஷணத்வாதிகரணம் [3]

## 138 [ஸூ] - நவிலக்ஷணத்வாதஸ்யதாத்வஞ்ச சப்தாத் [4]

இவ்வாறு கபிலஸ்ம்ருதியையும் யோக ஸ்ம்ருதியையும் முரணுவை யாதலின் அவற்ருல் வேதாந்தார்த்தம் பாதிக்கப்படாதென்றுகாட்டி பிறர் கூறும் தர்க்கங்களால் ஏற்படும் பாதத்தை இங்கு பரிஹரிக்கிருர் என்பது - ஸங்கதி.

வேதாந்தங்களுக்கு ப்ரஹ்மம் காரணம் என்பதில் நோக்கமா? அன்றி ப்ரதானம் காரணமா என்று சந்தேஹம் தோன்றுகிறது. அங்கு ப்ரதான காரணத்வவே யுக்தமானது. ஏனெனில், ஜகத் - ஜடமாய் இருப்பதால் ப்ரஹ்மத்தைவிட ஸுஜாதீயமான ப்ரதானமே காரணமாகத்தக்கது என்ற பூர்வபக்ஷத்தை நிரஸீக்கிருர். "நவிலக்ஷணத்வாத்" – அபிமானிவ்யப தேசாச் சான்ய: என்ற இரு சூத்திரங்களாலும் நிரஸனம் செய்கிருர். இந்த இரண்டு சூத்ரங்களும் பூர்வபக்ஷ ஸூத்ரங்கள்.

***இதிசேத்ந:*** என்று கூறுவது பொருந்தாது ஏனெனில் ***அஸ்யக:*** இந்த ஜகத்திற்கு விலக்ஷணத்வாத்: ஜடத்வாதிகளால் ப்ரஹ்மத்தைவிட வேறுபாடு இருப்பதால் என்றபடி. ஸலக்ஷணங்களுக்கே மிருத்கடாதிகளைப்போலே கூடுமென்பதால். *அத:* ஆகையால் ஜகத்திற்கு சமமான ப்ரதானமே காரணம். ***ததாத்வஞ்ச சப்தாத்*** – ப்ரஹ்மத்துக்கு ஜகத் விலக்ஷணத்வமும் "விஜ்ஞானம் சாவிஜ்ஞானஞ்ச" முதலிய சப்தங்களால் அறியப்படுகிறது.

ஆபோவா அகாமயந்த - தம்ப்ருதிவ்யப்ரவீத் முதலிய வாக்யங்களில் ப்ருதிவீ முதலிய அசேதனங்களுக்கும் ஜ்ஞானகார்யமான காமனை முதலியவை கூறப்படுவதால் ஜ்ஞானாச்ரயம் என்று முறையில் ப்ரஹ்மத்துடன் ஸாம்யம் உள்ளபடியால் உத்பத்தி தவறில்லையேறென்ருல் அதற்கும் பூர்வபக்ஷிவிடை கூறுகிருர்.

## 139 (ஸூ) அபிமானி வ்யபதேசஸ்து விசேஷானுகதிப்யாம் (5)

'து' என்ற சப்தம் சங்கையை நிவர்த்திக்கிறது. ப்ருதிவீ அப்ரவீத் முதலிய இடங்களில் ப்ருதிவ்யாதிகளின் அபிமானி தேவதைகளையே குறிப்பதாகும். ப்ருதிவீ முதலிய அசேதனங்களைக் குறிப்பதல்ல. ஏனெனில், ***விசேஷானு கதிப்யாம*** - ஹந்தாஹமிமா: திஸ்ரோதேவதா: என்று ப்ருதிவ்யாதிகளை தேவதையென்று விசேஷ்யத்தால் குறிப்பதாலும், அக்நிர்வாக் பூத்வா முகம் ப்ராவிசத்'' முதலியவற்றால் அக்னி முதலியவற்றுக்கு வாகாதிகளிலே அனுகதி (பின்பற்றிச் செல்லல்) கூறுவதாலும், அசேதநத்வேன ஜகத்துக்கு ஸஜாதீயமான ப்ரதானமே காரணம் என்பது பூர்வபக்ஷம். இதற்கு ஸித்தாந்தி கூறும் விடை :—

## 140 (ஸூ) த்ருச்யதேது (6)

து சப்தம் முன்சொன்ன பக்ஷத்தை நிரஸனம் செய்கிறது. ப்ரஹ்மத்தை விட விலக்ஷணமான ஜகத்துக்கு ப்ரஹ்ம கார்யத்வம் என்பது கூடும். ஏனெனில், உலகில் தேனடையிலிருந்து விலக்ஷணமான க்ருமி போன்றவை தோன்றக் காணப்படுகிறதல்லவா? அப்படியே கார்யமும் காரணமும் விலக்ஷணமாயிருப்பது தவறல்லவே! ஆகவே, ப்ரஹ்மம் ஜகத்திற்குக் காரணமாயிருக்கலாம்.

## 141 (ஸூ) அஸதிதி சேந்ந ப்ரதிஷேத மாத்ரத்வாத் (7)

கார்யம் காரணத்தைக்காட்டிலும் விலக்ஷணமாயிருக்கலாமென்று ஏற்றுக்கொண்டால் காரணத்தில் கார்யம் இல்லாததால் அஸத்கார்யவாதம் சரியென்றதாகும். அஸத்தான பொருளே தோன்றுகிறது எனக்கொள்ள நேரும். அப்படியாயின் ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம என்று ஜகத்தையும் ப்ரஹ்மத்தையும் ஸமானாதிகரணமாகச் சொன்னது பொருந்தாது. ***இதிசேந்ந*** இப்படிக்கூறுவது பொருந்தாது. ***ப்ரதிஷேதமாத்ரத்வாத்*** - கார்யகாரணங்கள் ஒரேவிதமாயிருக்க வேண்டும் என்ற நியமம் மட்டுமே தடுக்கப்பட்டதன்றி-அவை ஒரே த்ரவ்யம் என்பதைத் தடுக்கவில்லையே. காரணாவஸ்தையிலிருக்கும் ஒரு த்ரவ்யமே கார்யமான அவஸ்தையை அடைந்து கொண்டு ஸஜாதீயமாகவும், விஜாதீயமாகவும் இரு அவஸ்தைகளையுமடைகிறது என்பது கருத்து.

## 142 (ஸூ) அபீதௌ தத்வத் ப்ரஸங்காத் அஸமஞ்ஜஸம்

இது பூர்வபக்ஷ ஸூத்ரம். ***அபீதௌ***= ஜகத்துக்கு ப்ரஹ்மத்தினிடம் அப்யய (ப்ரளய) காலத்திலும்—உத்பத்தியிலும் ***தத்வத் ப்ரஸங்காத்***—முன்

போலவே பிண்டத்வம், கடத்வம் முதலிய அவஸ்தைகளையுடைய மண்போல ப்ரஹ்மத்திற்கும் ஸர்வஜ்ஞத்வம், அஜ்ஞத்வம் முதலிய நிலைகள் வந்துவிடு-மாதலின் முரணான அர்த்தத்தைச் சொல்லும் வேதாந்தங்களுக்கு அஸ-மஞ்ஜஸமென்ற நிலை வந்துவிடும். ஸர்வஜ்ஞத்வாதிகளையுடைய ப்ரஹ்மமே அஜ்ஞத்வ விசிஷ்ட ஜகத்தாகிறது என்று வேதாந்தங்கள் கூறுகின்றன-வென்றால், ப்ரஹ்மம் காரணம் என்று சொல்வது தகாது என்பது பூர்வ-பக்ஷம். இந்த சங்கையைப் பரிஹரிக்கிறார்.

## 143 (ஸூ) நது த்ருஷ்டாந்தபாவாத் [ 9 ]

ந — ப்ரஹ்மத்திடம் அஜ்ஞத்வாதிகள் ப்ரஸங்கிக்கமாட்டா. அதனாலேயே வேதாந்தங்களுக்கு அஸமஞ்ஜஸத்வமுமில்லை. 'து' சப்தம் அஜ்ஞத்வ-ப்ரஸங்கம் அஸம்பாவிதம் என்று காட்டுகிறது. ஒரு வஸ்துவிற்கு இரு அவஸ்தைகள் ஏற்பட்டால் குண தோஷங்களின் வ்யவஸ்தையில் த்ருஷ்டாந்தம் இருப்பதால் ப்ரஹ்மத்திடமும் கார்யத்வம் காரணத்வம் என்ற, இரண்டு அவஸ்தைகள் இருப்பதாக சரீரகதமான கர்மவச்யத்வாதிகளும் அதில் ஒட்டுவதில்லை. ஆதலின், தவறேதுமில்லை. மனிதன் எப்படி பிறந்தபின் பாலனாயும் யுவாவாகவும், முதியவனாகவும் ஆகிறானோ அதுபோல, அசேதனமாக மனிதசரீரத்தில் பிறப்பும் பாலத்வாதிகளும் ஏற்படினும், ஆத்மாவில் அவை ஏற்படுவதில்லையல்லவா? ஆத்மாவிடம் ஏற்படும் சுகதுக்காதிகளும் சரீரத்திற்கில்லையல்லவா? இதேபோல, அவஸ்தாபேதமடையும் ப்ரஹ்மத்தினிடம் சேதனா சேதன தோஷங்கள் கலப்பதில்லை. ஆதலின், வேதாந்தங்கள் ஸமஞ்ஜஸமே,

## 144 (ஸூ) ஸ்வபக்ஷ தோஷாச்ச [ 10 ]

ப்ரஹ்ம காரணவாதம் தோஷமற்றது என்பது மட்டுமன்று. ப்ரதான-காரணவாதம் மிக்க தோஷங்களையுடையது என்பதால் அதைவிட்டொழிக்க-வேண்டும். அவர் மதத்தில் நிர்விகாரமான புருஷனுக்கு ப்ரக்ருதியின் சேர்க்கையால் ப்ருக்ருதியின் தர்மத்தைத் தன்னிடமுள்ளதாய் ப்ரமித்து அதனடியாக ஜகத்தின் ஸ்ருஷ்டி கூறப்படுகிறது. ப்ரக்ருதியின் இருப்பை மட்டும் ஸந்நிதானம் என்றால் முக்தனுக்கும் அத்யாஸம்வரும். விகாரங்கள் ஸந்நிதானமென்றால், எல்லாவிகாரங்களும் அத்யாஸத்தாலே ஏற்படுவதால் அத்யாஸத்திற்கு விகாரம் ஹேது என்று கூறுவது முரணாகும். இவ்வாறு மிகவும் அஸமஞ்ஜஸமான ப்ரதான காரணவாதம் இகழத்தக்கதாம்.

## 145 (ஸூ) தர்க்காப்ரதிஷ்டாநாதபி (11)

காபில ஸித்தாந்தம் தர்க்கத்தை மூலமாகக் கொண்டதாதலின், பௌத்தாதிகள் கூறிய தர்க்கங்களாலே அது பாதிக்கப்பட்டபடியால் தர்க்கத்திற்கோர் முடிவேயிராமையால் அது யுக்தமான சித்தாந்தமன்று.

146 (ஸூ) அன்யதாநுமேயமிதிசேதேவமப்யநிர்மோக்ஷ ப்ரஸங்க: (

*அன்யதாநுமேயம்*- இதற்கு முன் உள்ள தர்க்கங்களாலே ப
வொண்ணுதபடி ப்ரதான காரணத்தை அனுமானிக்கிறோம்.
என்று கூறினுல் *ஏவமபி அநிர்மோக்ஷ ப்ரஸங்க:*- இப்படியும் - உன்
தர்க்கத்தில் திறமையுள்ளவன் ஒருவன் ஏற்படக்கூடுமாதலின்,
தர்க்கத்தாலே பாதிப்பு ஏற்படுமாதலின், தோஷத்திற்கு விமோசனமே

## சிஷ்டாபரிக்ரஹாதிகரணம் (4)

147 ஸூ. ஏதேந சிஷ்டாபரிக்ரஹா அபிவ்யாக்யாதா: (13)

*ஏதேந* - கபிலஸ்ம்ருதியை நிராகரணம் செய்த ஹேதுவான
நிலையற்றது என்ற ஹேதுவால், சிஷ்டாபரிக்ரஹா: சிஷ்டர்கள்
கணுதாதிகளின் ஸ்ம்ருதிகளும் - வ்யாக்யாதா: ( நிரஸனம் செய்யப்
என்று) வ்யாக்யாதங்கள் என்பது கருத்து.

## போக்த்ராபத்தி அதிகரணம் [5]

148 (ஸூ) போக்த்ராபத்தேரவிபாகஸ்சேத் ஸ்யால் லோகவத் [

ப்ரஹ்மத்துடன் ஜகத்திலுள்ள விகாரங்கள் ஒட்டாது என்பதற்
முள்ள ஜீவனை த்ருஷ்டாந்தமாக - "நது த்ருஷ்டாந்தபாவாத்"
ஸூத்திரத்திலே காண்பித்தது. அப்படியானுல், ஜீவனுக்குள்ளது
சர்வசரீரத்வமுள்ளமையால் ப்ரஹ்மத்திற்கு சுகதுக்க போக்த்ருத்வ
என்னும் சங்கையால் இவ்வதிகரணம் ப்ரவ்ருத்தமாகிறது. ஸர்வாத்ம
ப்ரஹ்மத்துக்குத் தன் சரீரமான ஜீவனைக்காட்டிலும் நிரதிசய ஆன
கஸ்வரூபமான பேதம் கூறியது பொருநதுவதா இல்லையா என்று
பொருந்தாது என்று பூர்வபக்ஷம்.

ப்ரஹ்மத்துக்கு ஜகத்து சரீரமானுல் ஜீவனுக்குப்போல ஸ
போக்ருத்வம் வந்து சேரும் என்பதால் பேதமில்லை (அபேதமே) இ
காட்டிலும் அபஹத பாப்மத்வாதிருபமான விபாகம் கூடாது. இ
*ஸ்யாத்* – என்ருல் விபாகம் வரத்தான்வரும். ப்ரஹ்மம் கர்மவச்யம் இ
யால் ஜீவனைக்காட்டிலும் விபாகம் கூடும். ஸுகதுக்க போக்ருத்வ
ஸசரீரத்வம் காரணமன்று. கர்மவச்யத்வமே காரணம். அகர்மவ
முக்தனுக்கு போக்த்ருத்வம் காணப்படாமையால் அதேபோன்று ஈச்வ
ஸுகதுக்க போக்த்ருத்வம் ப்ரஸங்கியாது. *லோகவத்* - லோகத்தில் ரா
வுச்யர்களான ப்ருத்யர்களுக்கும் சாஸகனை ராஜாவுக்கும் ஸசரீரத்வ

யிருந்தாலும், சாஸனத்தை மீறினால் துக்கம் ப்ருத்யர்கட்கு இருக்க, ராஜாவுக்குத்தன் சாஸனத்தை மீறியதாக துக்கம் ஏற்படுவதில்லை. அது போலவே, ஸர்வலோக நியந்தாவான ஈச்வரனுக்கு சுகதுக்கங்களில்லை என்பது திருவுள்ளம்.

## ஆரம்பணுதிகரணம்

நவிலக்ஷணத்வாதிகரணத்திலே கார்ய காரணங்கள் ஸலக்ஷண மாகவேயிருக்க வேண்டுமென்று நியமம் சொல்லும் ஸாங்க்யனை நிரஸனம் செய்து இந்த அதிகரணத்தில் கார்யகாரணங்களுக்கு விலக்ஷணதை சாதிப்பது போல் ஸ்வரூப பேதமும் சித்திக்கட்டும் என்று எழுந்த வைசேஷிகனின் கேள்விக்கு கார்யமும் காரணமும் அனன்யங்கள் (அபின்னங்கள்) என்று விளக்குவதன் மூலம் கண்டனம் செய்கிறுர் என்று ஸங்கதி.

## 149 [ஸூ-ூ] ததநந்யத்வமாரம்பணசப்தாதிப்ய: 1 1

ப்ரஹ்மத்தின் கார்யமான ஜகத், ப்ரஹ்மத்தைவிட வேருனதா ஒன்று பட்டதா என்று சம்சயம் - வேருனதேயென்று பூர்வபக்ஷம். ஏனெனில், மண் முதலியவற்றிற்கும் குடம் முதலியவற்றிற்கும் அறியப்படும் தன்மை, கூறப் படும் தன்மை முதலியவற்றுல் பிற இடங்களில் கார்ய காரணங்களுக்குப் பேதம் காண்கையாலும் மண், குடம் முதலியவற்றைப்போல் ப்ரஹ்மத்திற்கும் ஜகத்திற்கும் பேதம் ஒப்பவேண்டும். ஆகையால் அபேத ச்ருதிகள் லக்ஷணயா வேறுதாத்பர்யம் கொண்டவை என்னும் பக்ஷத்தை நிரஸனம் செய்கிறுர்.

### (ஸூ) ததநந்யத்வம் ஆரம்பண சப்தாதிப்ய:

**ததநந்யத்வம்** - அந்த ப்ரஹ்மத்தைவிட வேறுபாடின்மை, (ஜகத்திற்குச் சித்திக்கிறது என்று பொருள்) ஆரம்பணசப்த: ஆதி: யேஷாம் தாநி. ஆரம்பண சப்தாதீநி, தேப்ய: - வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம் - ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத் முதலிய - ஜகத்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் அபேதத்தைக் கூறும் வாக்யங்களாலே ஜகத்திற்கு ப்ரஹ்மத்தைவிட வேறுபாடின்மை சித்தித்தது. அதாவது:— விகாரமும் - குடம் முதலிய அவஸ்தைகளும், நாமதேயம்:- குடம் முதலிய பெயர்களும், வாசாரம்பணம்-குடத்தால் தண்ணீர் கொண்டுவா என்றுசொல்லை உச்சரித்து ஒன்றை ஏற்பது, மற்றொன்றை விடுவது முதலிய ப்ரவ்ருத்தி நடைபெற ஏற்பட்டவை. ஆரம்பணம்-கொள்ளுதல் மண் என்ற பொருளாலே விகாரமும், நாமதேயமும் கொள்ளப்படுகின்றன. குடம் என்ற நிலையும் பெயரும் ஏற்கப்படுகின்றது. ம்ருத்திகேத்யேவ ஸத்யம் - கார்யப்பொருளாய்

மாறியநிலையிலும், நேற்று நாம்பார்த்தமண்ணே இப்போது குடப வாணுயாகவும் மாறிவிட்டது என்று காரணமான மண் நினைவுபடு படுவதாலும் மண்ணின் அவஸ்தைகள் பல இருப்பினும் த்ரவ்யம் ஒ யென்பது ப்ரத்யக்ஷ ஸித்தமாம். மண்ணைத்தவிர வேறுபொருள் தே வில்லையென்பதாம். ஒரே மண் என்னும் த்ரவ்யம் பிண்டம் (கட்டி-உருண் குடம் முதலிய அவஸ்தை மாறுபாடுகளால், மண்கட்டி, குடம், வா ஓடு முதலிய பெயர்களைப் பெறுகிறதேபோல் புத்திபேதம், சப்தத்தின் பே முதலியவை அவஸ்தா பேதத்தினைச் சார்ந்திருப்பதால், அவை வஸ்து பேதத்தைச் சாதிக்கமாட்டாதவை. ஆகவே மண் என்ற ஒரே பெ கார்யமாயும் காரணமாயும் இருப்பதுபோல் சிதசித்விசிஷ்டமான ப்ரஹ் ஸூக்ஷ்மாவஸ்தையிலே காரணமாயும் ஸ்தூலாவஸ்தையிலே கார்யப இருப்பதால் ஜகத்துடன் அது அனன்னியம் (பேதமற்றது) என்று பெறுகிறது. இங்கு வாசாரம்பண சப்தாதிப்ய: என்று கூறாமல் ஆரம் சப்தாதிப்ய: என்று ஸூத்ரம் செய்யப்பட்டமையால், ' வாசாரம்பண என்பதை ஒரே பதமாகக் கூறிய ஸ்ரீ சங்கரர் மதம் தவறு என்று குறிப் உணர்த்தப்படுகிறது.

ஸ்ரீ பாஷ்யத்தில் இவ்வதிகரணத்தில் முதலில் கார்ய காரணங்க பேதம் கூறும் கணாதமதம் காட்டப்படுகிறது. அதற்கு ''அத்ராஹு:'' எ தொடங்கி சங்கரர் தம் சித்தாந்தப்படி கூறும் சமாதானம் கூறப்பட் அந்த சங்கரரை ஜீவனுக்கு அஜ்ஞானம் சொல்பவன் எதிர்த்தான் - '' கேசித்'' எனத் தொடங்கியது அவ்வெதிர்ப்பு. பின்பு மாயா அவி இரண்டிற்கும் பேதம் சொல்பவனே எதிர்த்தான். பிறகு இவ்வதிகரண பக்ஷி - காணுதன் சங்கர மதத்தைக் கண்டிக்கவே இறுதியாகக் காணு நம் பாஷ்யகாரர் நிரஸனம் செய்கிறார் என்பது ஸாரம்.

## 150 [ஸூ] பாவே சோபலப்தே: (16)

குடம் முதலிய கார்யாவஸ்தையிலும் அந்த மண் காணப்படுவ அந்த மண்ணே இந்தக் குடமாகியிருக்கிறதென்று காரணம் காரிய தோன்றுவதால் கார்யம் வேறானதன்று. பாலன், யுவா, கிழவன் எ அவஸ்தைகள் மாறினாலும் தேவதத்தன் ஒருவனேயன்றி வேறானவனல்ல அதுபோல் ஜகத்தும், ப்ரஹ்மமும் ஒன்றேயன்றி வேறல்ல.

## 151 (ஸூ) ஸத்வாச்சாபரஸ்ய: (17)

*அபரஸ்ய* - கார்யத்திற்கு, ஸத்வாச்ச - காரணத்தில் இருப்பு தோ வதாலும் காரணத்தைவிடக் கார்யம் வேறன்று. இந்தக் குடம் வா முதலியன யாவும் நேற்று மண்ணாகவேயிருந்தன என்று காரணத்

கார்யம் தோன்றுகிறது. இப்போது குடம் முதலிய உருவத்தில் தோன்றும் மண் முன் பிண்ட வடிவமாயிருந்தது என்பது உறுதியான கருத்து.

## 152 ஸூ அஸத்வ்யபதேசாந்நேதி சேந்ந தர்மாந்தரேண வாக்ய சேஷாத் யுக்தேச் சப்தாந்தராச்ச (18)

ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத் என்று காரணவஸ்தையில் கார்யம் அஸத் (இல்லை) என்று பேசுவதால் - காரணத்தில் கார்யம் இல்லை என்றால் – அது சரியன்று. *தர்மாந்தரேண* - அஸத் என்ற வழக்கிற்குக் காரண மான ஸூக்ஷ்மாவஸ்தையென்ற வேறு தர்மத்தாலே அஸதேவ இதம் என்ற வழக்கு ஏற்படுகிறது. அதற்கு ஹேது எதுவென்றால், வாக்யசேஷாத், யுக்தே: சப்தாந்தராச்ச - ததஸதேவ ஸந்மனோகுருதஸ்யாமிதி - அஸத் தென்ற சொல்லப்பட்ட வஸ்துதானே ஸத்ஸ்யாம் என்று ஸங்கல்பம் பண்ணியது என்று வாக்யசேஷத்தில் சொல்லுகையால், அஸத் என்று வழங்குவது ஸூக்ஷ்மாவஸ்தை என்று வேறு தர்மத்தின் ஸம்பந்தத்தால் ஏற்பட்டது. ஒன்றுமில்லாதது (துச்சம்) என்ற பொருளில் இல்லை. யுக்தேச்ச - குடம் இருக்கிறது. குடம் இல்லை என்றும் இருவகை வழக்கு களுக்கும் ஒன்றுக்கொன்று முரணான குடத்தன்மை, கபாலத்தன்மை என்ற தர்மங்களே ஹேதுக்களென்று சொல்வதே பொருத்தமானது. ஆகையால்- அந்த குடத்தன்மை, கபாலத்தன்மை என்னும் இவை தவிரத் தோன்றாத தான துச்சத்வத்தை, அஸத்வ்யபதேசத்திற்கு ஹேதுவாகக் கற்பித்தல் அடியோடு தவறானது. *சப்தாந்தராச்ச* "இதம்வா அக்ரே நைவ கிஞ்சநா ஸீத்" முதலிய காரண வாக்யங்களுக்குச் சமமான – ஸதேவ ஸோம்யே தமக்ர ஆஸீத் என்பது முதலான காரண வாக்யத்தில் ஸச்சப்தத்தாலே காரணத்தைச் சொல்வதால் - அந்த அஸத் சப்தத்திற்கும் ஸூக்ஷ்மாவஸ் தாவிசிஷ்டமான ப்ரஹ்மமே அர்த்தம் என்று தோன்றுகிறது. "ஸத்" என்றால் ப்ரமாணஸித்தம் என்பது பொருள்.

## 153 ஸூ படவச்ச (19)

நூல்கள் விசேஷ ஸம்பந்தத்தைப்பெற்று வஸ்த்ரம் என்று பெயர். தோற்றம், கார்யாந்தரங்கள் முதலியவற்றை அடைகின்றனவே - அதேபோல ப்ரஹ்மமும் நாமரூப விபாகங்களைப் பெற்றமையால் கார்யமென்னும் தன்மையையடைகிறது.

## (154) (ஸூ) யதாச ப்ராணாதி: [20]

ஒரே வாயு எவ்வாறு உடலில் வெவ்வேறு வியாபாரத்தைப் பெற்று ப்ராணன், அபானம் முதலிய பெயர்களைப் பெறுகிறதோ, அதுபோலவே ப்ரஹ்மமும், நாமரூப விபாகத்தால் கார்யபாவத்தை அடைகிறது என்பதாம்,

## க்ருத்ஸ்ன ப்ரஸக்த்யதிகரணம்.

### 160 (ஸூ) க்ருத்ஸ்னப்ரஸக்தி: நிரவயத்வசப்தகோபோவா [26]

காலமென்னும் வெளியுதவியைமட்டும் கொண்டு ப்ரஹ்மம் ஜகத்-காரணமாகட்டும். அப்படியிருந்தாலும் ஒரு அவயவமுமில்லாத ப்ரஹ்மஸ்வ-ரூபம் எப்படி பலவாருக மாறுவேன் என்று ஸங்கல்பிப்பது ? எப்படிப் பல கார்யப்பொருளாக மாறுவது? என்று சங்கையால் சங்கதி.

ப்ரஹ்மத்துக்கு ஜகத் காரணத்வம் கூடுமா கூடாதா என்ற சம்சயம் கூடாது. ஏனெனில், நிரவயவமான ப்ரஹ்மம் ஜகத்திற்கு உபாதானமென்று ஏற்றுக்கொண்டால், ப்ரஹ்மம் முழுவதுமே ஜகத்தாகப் பரிணமிப்பதால் நித்யவிபூதியில் வ்யாபித்துள்ளது என்ற தன்மை ப்ரஹ்மத்துக்கு ஒவ்வாது போம். இத்த தோஷம் நீங்க ப்ரஹ்மம் ஸாவயவம் என்று ஏற்கப்பட்டால் ஏகமேவாத்விதீயம் என்று நிரவயவத்வம் சொல்லும் ச்ருதியுடன் முரண்பாடு ஏற்படும் என்பது பூர்வபக்ஷம்.

***க்ருத்ஸ்ன ப்ரஸக்தி:*** = ப்ரஹ்மம் காரணமாகில், அது முழுவதுமாகக் காரியமாய் மாறுவதாக ஏற்கவேண்டிவரும். அதற்காக ஸாவயவம் என்று ஏற்ருல், நிரவயவத்வம் சொல்லும் "ஏகமேவாத்விதீயம்" என்ற ச்ருதி வாக்யத்துடன் விரோதம் - நிரவயவத்வசப்த கோபம் வரும். என்ற இப் பூர்வபக்ஷத்தை நிரஸனம் செய்கிருர்.

### 161 (ஸூ) ச்ருதேஸ்து சப்தமூலத்வாத் [ 27 ]

'து' சப்தம் பக்ஷத்தை விலக்குவது *ச்ருதே:* - ப்ரஹ்மத்தின் இருப்பிற்கு ச்ருதியே ப்ரமாணமாகையால், இப்படி நேராது. *சப்தமூலத்வாத்* - ச்ருதி என்னும் சப்தத்தையே ஆதாரமாக (நம்பிக்கை காரணமாக) ஏற்றிருப்பதால் ப்ரமாணாந்தரங்களுக்கு விஷயமாகாத ப்ரஹ்மத்திற்கு ச்ருதி கூறியபடியே நிரவயவத்வம் காரணத்வம், ஸர்வசக்தத்வம் முதலிய தர்மங்களை ஏற்றுக்கொள்வதால் எல்லாமே பொருந்தும். இதனுல் விரோதமில்லை. பரிமித சக்திகமான க்ஷீராதிகளை உதாரணங்காட்டி வினவுதல் கூடாதென்று திருவுள்ளம்.

### 162 (ஸூ) ஆத்மநிசைவம் விசித்ராச்சஹி [28]

***ஆத்மநிச ஏவம்*** - ஜீவாத்மாவிடம் ஸகலேதரவைலக்ஷண்யத்தாலே தோஷமேதும் வாராமை போல தேஹாதி வைலக்ஷண்யத்தால் தோஷமேதும் வாராது என்று பரிஹாரம் கூறவேண்டும். ***விசித்ராச்சஹி*** - அசேதனமான அக்னிஜலம் முதலியவையும் விசித்ரங்களாகவே காணப்படுகின்றன.

அக்னியிலுள்ள வெப்பம் நீரில் இல்லை. நீரிலிருக்கும் குளிர்ச்சி நெருப்பிலில்லை அப்படியே, சிதசித் விலக்ஷணமான ப்ரஹ்மத்திடம் சாஸ்த்ரத்தால் மட்டும் அறியத்தகும் ஸர்வசக்திமத்வம் கூடுமென்பது கருத்து.

### 163 (ஸூ) ஸ்வபக்ஷ தோஷாச்ச [29]

அனுமான கம்யமாய் அசேதனமானப்ரதானத்தில் கீழ்ச்சொன்ன தோஷம் யாவும், மற்றும் பலவும் ப்ரஸக்தமாகும்.

### 164 (ஸூ) ஸர்வோபேதா ச தத்தர்சனாத் [30]

பரதேவதையாவது மற்ற யாவற்றையும்விட விலக்ஷணத்தன்மையால் மட்டும் சர்வ சக்தியுக்தையன்று; பின் என்னெனில், *தர்ச்சனாச்ச* - ச்ருதியாலும் கூறப்பட்டதால் சர்வசக்தியுள்ளதாம், தர்சயதீதி - தர்சனம் - ச்ருதி - வேதம். "பராஸ்ய சக்தி: விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞானபலக்ரியாச" இது முதலிய ச்ருதிபலத்தாலும் உபாதானத்வம், நிமித்தத்வம் இரண்டும் கூடிய சர்வ சக்தியோகம் சித்திக்கிறது. ஆகவே ப்ரஹ்மத்திற்குக் காரணத்வம் தடையற்றது.

### 165 (ஸூ) விகரணத்வாந்நேதி சேத்ததுக்தம் [31]

சொன்ன அர்த்தத்தை உறுதிப்படுத்த மேலும் சங்கையையெழுப்பி சமாதானம் கூறுகிறார். விகரணத்வாத் - சரீரமின்மையால், நேதிசேத் - ப்ரஹ்மத்துக்குக்காரணத்வம் கூடாது என்றால். "நதஸ்யகார்யம் கரணஞ்ச வித்யதே" என்று சரீரேந்திரியாதிகள் அவனுக்கில்லை யென்றபடியால் - ததுக்தம் - பரிஹாரம் முன்னரே கூறப்பட்டது. ச்ருதேஸ்து சப்த மூலத்வாத், விசித்ராச்சஹி என்ற சூத்திரங்களால் சர்வசக்தியுள்ளவனென்று கூறப்பட்டபடி ஸர்வவிதகாரணத்வமும் கூடும் என்பதாம்.

## ப்ரயோஜனவத்வாதிகரணம்

### 166 (ஸூ) ந ப்ரயோஜனவத்வாத் [32]

அவாப்த ஸமஸ்தகாமனான பரமபுருஷனுக்கு ஜகத் ஸ்ருஷ்ட்யாதிகளில் ப்ரயோஜனமில்லாமையால், காரணத்வம் கூடாதென்கிற சங்கையை இங்கு பரிஹரிக்கிறார் என்று ஸங்கதி.

ப்ரஹ்மத்துக்கு ஜகத்காரணத்வம் கூடுமா? கூடாதா என்று சம்சயம், அது கூடாது. *நப்ரயோஜனவத்வாத்* - ப்ரஹ்மம் அவாப்த ஸமஸ்தகாமன் ஆனபடியால் ச்ருஷ்டியால் அதற்கு ஒரு ப்ரயோஜனமும் இல்லாமையால்

அது பொருந்தாது. உலகில் குயவர்போன்றவர் ஒரு ப்ரயோஜனத்தை எதிர் பார்த்தே குடம் முதலியவற்றைப்படைக்கப்பார்க்கிரும். ஆகவே கர்ப்ப - வாஸாதி துக்கரூபமான ஜகத்தின் ச்ருஷ்டியைக் கருணையால் செய்கிருனென்பது அயுக்தமாதலின், ப்ரஹ்மத்திற்குக்காரணத்வம் பொருந்தாதென்று பூர்வபக்ஷம் இந்த சூத்ரத்தில் கூறப்படுகிறது. அதற்கு விடை.

## 167 (ஸூ) லோகவத்து லீலாகைவல்யம் (33)

துசப்தம் சங்கையை விலக்குகிறது. *லீலாகைவல்யம்* - கேவலம் லீலையே, ப்ரயோஜனம். கேவலம் என்பது வேறு பயன்களில்லையென்கிறது. ஆகவே கேவல லீலை ஸ்ருஷ்டியை ஆரம்பிக்கவே பயன்படுகிறது. அவன் அவாப்த ஸமஸ்தகாமனுனாலும், லீலாரஸமாத்திரத்திற்காக, ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைச் செய்வது பொருந்தும். லோகவத் - லோகத்தில் மஹாராஜாவிற்குக் கேவலம் பந்து விளையாட்டு, சூதாட்டம் முதலியவற்றில் ஈடுபாடு காணப்படுகிறது. அப்படியே ப்ரஹ்மத்துக்கும் காரணத்வம் கூடும்.

## 168 [ஸூ] வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்ததாஹிதர்சயதி (34)

இங்கு ஓர் ஆக்ஷேபம் தோன்றுகிறது. ஸர்வஸமனுய் பரமகாருணிகனுன பரமபுருஷனுக்கு தேவமனுஷ்யாதிகளான விஷமமான ஸ்ருஷ்டிகளைச் செய்வதால் - வைஷம்யமும், (பக்ஷபாதமும்) துக்கம் மிக்க ஜகத்தைப் படைப்பதால் நைர்க்ருண்யம் (இரக்கமின்மை) என்ற தோஷமும் வருமே என்பதேயது. அதற்கு இந்த சூத்திரம் விடை தருகிறது.

*வைஷம்ய நைர்க்ருண்யே ந* - இவ்விரு தோஷங்களும் வாரா. ஏனெனில், ***ஸாபேக்ஷத்வாத்*** ஜீவர்களின் முந்தைய கர்மங்களை அனுஸரித்து தேவர், மனுஷ்யர் போன்று வேறுபட்ட ச்ருஷ்டியைச் செய்வதனுல் ஸ்வத: ஸர்வஸமனுன ஈச்வரனுக்கு தேவாதி விஷமஸ்ருஷ்டியிலும், துக்கமிக்க ஸ்ருஷ்டியிலும் அவ்வோ ஜீவர்களின் பூர்வ ஜன்ம கர்மமே ஹேது வென்று கருத்து.

*ததாஹி தர் சயதி:-* ஸாதுகாரீ ஸாதுர் பவதி, அஸாதுகாரீ பாபோ பவதிமுதலிய சாஸ்த்ரங்கள் பூர்வ கர்மாவிற்கு ஏற்பவே ஸாது, பாபீ என்ற வைஷம்யம்ஏற்படுவதைக் காட்டுகிறது.

## 169 (ஸூ) நகர்மாவிபாகாதிதி சேந்நாநாதித்வாத் உபபத்யதே சாப்யுபலப்யதேச (21)

நகர்ம - ஸ்ருஷ்டிக்கு முன்னுல் கர்மா இல்லை. ஏனெனில், அப்போது ஜீவர்களில்லாமையாலே. ஸதேவ ஸோம்ய இதம் அக்ரே ஆஸீத் ஏகமேவ

அத்விதீயம் என்னும் ச்ருதி ப்ரஹ்மத்துக்கும், ஜீவனுக்கும் விபாகமில்லை. ப்ரஹ்மம் ஒன்றே அப்போது இருக்கிறது என்று சொல்வதால் ஜீவர்களின் கர்மாவை யனுஸரித்தே ஸாதுத்வமும், பாபித்வமும் போன்ற வைஷம்யம் ஏற்படுகிறது என்பது அனுபபன்னம். இதிசேந்ந - என்று கூறுவது சரியன்று. ஏனெனில், ***அநாதித்வாத்*** - ஜீவர்களின், கர்மப்ரவாஹமும் அநாதியாயிருப்-பதாலே உபபத்யதேச - ஜீவர்கள் அநாதிகளாய் ப்ரளய காலத்தில் இருந்தாலும் ஏகமேவ என்று ச்ருதி பொருந்தலாம். ப்ரஹ்மம் ஏகம் என்பது நாம ரூபவிபாகத்திற்குத் தகாத ஸூக்ஷ்மாவஸ்தையிலுள்ள சேதனு சேதன சரீரகத்வம். இத்தால் அந்த ஸூக்ஷ்மாவஸ்தை ப்ரஹ்மபர்யந்தம் குறிப்பிடு வதால் ப்ரஹ்மம், ஏகம் என்பது பொருத்தமே. உபலப்யதேச - ச்ருதி ஸ்ம்ருதி களிலே ஜீவர்களுக்கும், அவர் தம் கர்மாக்களுக்கும் அனுதித்தன்மை தோன்று கிறது. ஜ்ஞாஜ்ஞௌ த்வௌ அஜாவிசநீசௌ, நித்யோ நித்யானும் சேதன: சேதனுனும் முதலிய ச்ருதி "ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ வித்தி அனுதீ உபாவபி" முதலியவை ஸ்ம்ருதிகள்.

## 170 (ஸூ) ஸர்வதர்மோபபத்தேச்ச 39 (36)

ஸாங்க்ய வைசேஷிகாதிகளின் பக்ஷங்களில் - காரணமாக ஏற்கப்பட்ட ப்ரதான, பரமாணுக்களில் அஸம்பாவிதமாயும் காரணத்வத்திற்கு இன்றியமை யாதவையுமான ஸர்வஜ்ஞத்வம், ஸர்வசக்தித்வம் முதலிய தர்மங்களுக்குப் பரமபுருஷனிடத்தில் பொருத்தமிருப்பதால் அவனே ஸூக்ஷ்ம சிதசித் சரீர கனுயிருந்து ஸகல ஜகத்துக்கும் ஸர்வவிதமான காரணமாவானென்பது சித்த மாயிற்று.

நம் ஆசார்யர் அருளிய முறையில் வைஷம்யம் நைர்க்ருண்யங்களை நீக்கும் முறையொன்று வருமாறு :-

" நிச்சேஷாத்மாபவர்க்கே - குத்ரசிந்நித்யமஸ்து ", அ. சாராவளீ.

இதன் பொருளாவது :- நித்யசம்ஸாரி ஒருசாரார். வருங்காலத்தில் ஸம்ஸாரமற்றவர் ஒரு சாரார். " க்ஷிபாம்யஜஸ்ரமசுபான் " என்றபடி ஒரு காலமும் ஸம்ஸார நீக்கம் அற்றவன் நித்யசம்ஸாரி. இத்தகைய நித்ய ஸம்ஸாரியை ஏற்றுக் கொள்ளாவிட்டால், லீலாவிபூதி நித்யையென்று ஸ்ரீ ஸூக்தியுடன் முரண்பாடு ஏற்படும். ஆகவே நித்யஸம்ஸாரியை ஏற்கவேண்டுமென்று சிலர் கூறுகின்றனர்.

மற்றுஞ்சிலர் எல்லா ஜீவர்களுமே முக்திக்கு யோக்யர்களென்று கூறும் சுகர்போன்றவர்கட்கு ஸஹகாரிகாரணம் ஸித்தித்தால் முக்தியில் சந்தேக மில்லையென்றும், க்ஷிபாம்யஜஸ்ரமசுபான், மாமப்ராப்யைவகௌந்தேய,

அவிச்சின்னஸ்தத: , மூடாஜன்மநிஜந்மநி - என்கிற ப்ரமாணங்கள் விளம்ப மிகுதியைக் கூறுவன என்றும், ''ததா ஸம்ஸாரி பாந்தஸ்ய யாதிமோஹச்ரம: சமம். முதலிய ப்ரமாணங்கள் எல்லா ஸம்ஸாரிகளுக்கும் உபாயத்தின் சம்பந்தத்தால் ஸம்ஸார மோஹ நிவ்ருத்தியைச் சொல்வ-தாலும் நித்யஸம்ஸாரியேயில்லையென்கிறார்கள். இந்த இரண்டு பக்ஷத்திலும் வைஷம்ய நைர்க்ருண்யத்தைப் பரிஹரித்தருளுகிறார்.

நித்யஸம்ஸாரியை ஏற்காவிட்டால், ஜீவர்கள் அனந்தர்களா யிருப்பினும், எல்லாரும் முக்தியோக்யர்களாதலின், காலக்ரமத்தில் முக்தர் களாகும் பக்ஷத்தில் - லீலாவிபூதியில்லாமல் போவதால் - பகவானுக்கு லீலை ஒய்வு பெற்றுவிடும். அதை விலக்க நித்யஸம்ஸாரியை ஏற்றால் அவனிடம் பகவானுக்குத் தயையில்லாமையாலே நைர்க்ருண்யம் என்னும் தோஷம் வரும் என்ற பூர்வபக்ஷத்திற்குச் சமாதானம் - முன் பக்ஷத்தில் லீலையற்றுப்போம் என்பது தோஷமன்று. ஏனெனில், சுயேச்சை யான செயலே லீலையாதலின், ஸ்ருஷ்டியில் ஈடுபடுவதுபோல் - அதிலிருந்து விலகிநிற்றலும் லீலையேயாதலின், பிறரின் உபத்ரவத்தினாலல்லாது தன் இச்சையால் மட்டும் வந்தபடியால் லீலையின் ஒய்வு குறையாகாது. நித்ய ஸம்ஸாரிபக்ஷத்தில் அந்தஜீவர்களின் முன் கர்மாவுக்கு ஏற்ப - பகவானின் தயை விரோதியாயிருப்பதால் நைர்க்ருண்யாதி தோஷங்களில்லை என்று பொருள்.

ஸ்ரீ பாஷ்யம் ஆரம்பணாதிகரணத்தில் - பூர்வபக்ஷத்தில் வந்த லீலா விபூதியின் ஏற்க முடியாதநிலையாகிற தோஷத்திற்கும் இவ்வர்த்தம் இங்கு வேறு ஒரு முறையில் பரிஹாரமாக எழுதப்படுகிறது.

இந்த ஸ்ம்ருதி பாதத்தில் 10 அதிகரணங்களில் 10 பொருட்கள் கூறப்படுகின்றன.

1. ஸ்ம்ருத்யதிகரணத்தில் - ஸாங்க்யஸ்ம்ருதி விரோதம் வருமே யென்பது பூர்வபக்ஷியின் யுக்தி.
2. யோகாதிகரணத்தில் ப்ரஜாபதியின் மதத்தில் விரோதம் வரும் என்பது யுக்தி.
3. நவிலக்ஷணத்வாதிகரணத்தில் காரண பூதப்ரஹ்மத்திற்கும் கார்ய மான ஜகத்துடன் வேறுபாடு.
4. சிஷ்டாபரிக்ரஹத்தில் பரமாணுகாரணத்வத்திற்குப் பாதகம்.
5. போக்த்ராபத்யதிகரணத்தில் தேஹஸம்பந்தத்தால் சுக துக்கானுபவம் தவிர்க்கமுடியாததென்பது யுக்தி.

6. ஆரம்பணுதிகரணத்தில் - கார்யமும் உபாதாநகாரணமும் பின்னமா யிருக்கவேண்டுமென்ற யுக்தி.

7. இதரவ்யபதேசாதிகரணத்தில் - தனக்கு ஹிதத்தைச் செய்யாமை, அஹிதத்தைச் செய்வதால் காரணத்வம் தகாதென யுக்தி.

8. உபஸம்ஹாராதர்சனுதிகரணத்தில் ஸஹகாரிகள் (உதவிப்பொருள்) இல்லாமையால் காரணத்வம் தகாதென்னும் யுக்தி.

9 க்ருத்ஸ்ன ப்ரஸக்த்யதிகரணத்தில் ப்ரஹ்மம் பூர்ணமாய்க் காரணமா? ஏகதேசம் காரணமா? என்ற விகல்பம், இவ்வாறு பத்து பூர்வபக்ஷ யுக்திகளையும் முன்காட்டிய யுக்திகளால் ஸூத்ரகாரர் நிராகரிக்கிருர். என்று திருவுள்ளம்.

10. நப்ரயோஜனவத்வாதிகரணத்தில் பயனின்மையால் ஸ்ருஷ்ட்யாதிகள் பொருந்தாதென்று ஆக்ஷேபம்.

இரண்டாம் அத்தியாயம் முதல்பாதம் முற்றிற்று.

## இரண்டாம் பாதம்

## ரசனுனுபபத்யதிகரணம்

தன் பக்ஷத்தில் ஸாங்க்யாதிகள் கூறிய அனுபத்திகளை (பிழைகளை)க் காட்டி இந்தத்தர்க்க பாதத்தில் எதிரி மதங்களைக்கண்டிக்கிருர் என்பது பாத ஸங்கதி.

முன் அதிகரணத்தில் அவாப்த ஸமஸ்த காமனுக்குப்பலாபேக்ஷையிராமையாலே நிமித்தகாரணத்வம் பொருந்தாதென்ற சங்கை தீர்க்கப்பட்டது இவ்வதிகரணத்தில் பிறரதுயுக்தி தவறென்று காட்டப்படுகிறதென்பது அதிகரண ஸங்கதி.

ஸாங்க்யர்கள் கூறும் ப்ரதானமே காரணமென்ற வாதம் நல்ல யுக்தியை ஆதாரமாகக் கொண்டதா இல்லையா என்று சம்சயம். நல்ல யுக்தியை ஆதாரமாகக் கொண்டதே. ஸத்வரஜஸ்தமோமயமான ஜகத்துக்கு அம்மூன்று குணங்களில் சமநிலையையுடைய ப்ரதானமே காரணம் என்பது தான் பொருத்தமுள்ளது, என்ற பூர்வபக்ஷத்தைக் கண்டிக்கிருர்.

### 171 [ஸூ] ரசனுனுபபத்தேச்ச நானுமானம் ப்ரவ்ருத்தேச்ச (1)

*அனுமானம்* - ப்ரதானமானது, நः - ஜகத்காரணமல்ல, *ரசனுனுபபத்தேச்ச* - ப்ராஜ்ஞனுன பரமபுருஷனுலே அதிஷ்டிதமில்லாத அசேதனமான ப்ரதானத்

திற்கு விசித்ரமான ஜகத்தின் ஸ்ருஷ்டி கூடாததால்; *ப்ரவ்ருத்தே:* ச- ரதம் முதலியவற்றிற்குக் காரணமான த்ரவ்யங்கள் - அசேதனங்கள் ரதத்தைப்-படைக்கத் தெரிந்து கொண்ட சேதனனால் தலைமை தாங்கப்பட்டுத் (அதிஷ்டித மாய்) தான் அதன்படைப்பு தொடங்கப்படுவதால், ஒரு பொருளின் குணங் களான வெண்மை முதலியவை போலவே - த்ரவ்யங்களான ஸத்வரஜஸ்-தமஸ் என்பவற்றிற்கும் உபாதான காரணத்வம் கூடாதென்று ச என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

## 172 (ஸூ) பயோம்புவச்சேத் தத்ராபி (2)

பய:- பாலும் அம்புவத் - தண்ணீரும் - ப்ராஜ்ஞனை ஜீவனது அதிஷ்டானமின்றியே தயிராகவும், இளநீர், மா, முதலிய பற்பல சுவை உடையனவாகவும் மாறுவதேபோல தனிப்ரதானமும் ஜகத்தாக மாறுவது பொருத்தமே - யென்றால் *தத்ராபி* - அந்தப் பாலிலும் தண்ணீரிலும் கூட ஜீவனின் அதிஷ்டானம் (தலைமை) உள்ளது என்பதை யோzப்ஸுதிஷ்டன் முதலிய ச்ருதிகளிலே சித்தமாகக் காண்பதால் அதுவும் நம் பக்ஷத்தில் சேர்ந்ததேயென்பதாம்.

## 173 (ஸூ) வ்யதிரேகாநவஸ்திதேச்சாநபேக்ஷத்வாத் (3)

***வ்யதிரேகானவஸ்திதே:*** எப்போதும் ஸ்ருஷ்டியே ஏற்படுமாதலின் ப்ரதிவர்கமென்னும் ப்ரளயாவஸ்தைக்கு இல்லாமை (அபாவம்) வரத்தோன்று வதால் என்றபடி, அதனால் ப்ராஜ்ஞனால் தலைமை தாங்கப்படாத ப்ரதானம் காரணமில்லை. மேலும் அநபேக்ஷத்வாத் ப்ரதானத்திற்கு சேதனபேக்ஷை இல்லாமையால், எப்போதும் ஜகத்தின் ச்ருஷ்டி நடந்துகொண்டேயிருக்க நேரிடும். ப்ராஜ்ஞ (ஜீவன்)னுக்கு அதீனமான பரிணாமத்தை ஏற்றுக் கொண்டால். ப்ராஜ்ஞனின் ஸங்கல்பத்திற்கு அனுகுணமாக ச்ருஷ்டி ப்ரளயாதிகள் கூடுமென்பது தாத்பர்யம்.

## 174 (ஸூ) அந்யத்ராபாவாச்ச நத்ருணாதிவத் (4)

***த்ருணாதிவத்ந*** - பசுக்கள் முதலியவை உட்கொண்ட புல்போன்றவை பாலாக மாறுவதுபோல் கேவலம் ப்ரதானமும் காரணமாகட்டுமேயெனில் தகாது. ***அன்யத்ராபாவாச்ச*** - காளை போன்றவை தின்ற புல்போன்றவை பாலாக மாறக்காணாமையால், அப்படிமாற - ப்ராஜ்ஞனை பகவானின் அதிஷ்டானம் அவச்யம் ஆதலின், அதில்லாத ப்ரதானம் காரணமாகாது.

## 175 (ஸூ) புருஷாச்மவதிதி சேத்தத்ராபி (5)

ப்ரதானம் ப்ராஜ்ஞனை பகவானால் அதிஷ்டானம் பெறுவிடினும் ஜீவன் தன்ஸந்நிதானத்தால் அதை ஜகத்தின் ஸ்ருஷ்டியில் ப்ரவர்த்திப்பிக்

கிருன். (தூண்டுகிருன்) எவ்வாறெனில், ***புருஷாச்மவத்*** - புருஷர்போலும், கல் போலும் - அதாவது நடக்க சக்தியற்றுப் பார்வையுள்ள புருஷன், நடக்க சக்தியுள்ள - கண் பார்வையற்ற புருஷனின் உதவியால் நடந்து விரும்பு மிடத்திற்குச் செல்வது போலவும், காந்தக்கல் தன் நெருக்கத்தால், இரும்பை அசைத்துச் தன் வசம் ஈர்ப்பது போலவும், ப்ரதானமும் ஜீவனின் சேர்க்கையால் உலகைப் படைக்கலாம், ***தத்ராபி*** - அப்படியும் ஜகத்ஸ்ருஷ்ட் யாதிகள் கூடா. குருடன் நடக்கவும், நொண்டி வழிகாட்டவும் சக்தியுள்ள சேதனர்கள். இரும்புக்கும் - காந்தத்திற்கும் எப்போதாவது நெருக்கம் ஏற்படுகிறது. இவ்விடமோ புருஷனுடைய ஸந்நிதானம் (அருகிலிருத்தல்) தவிர வேறு விசேஷமேதுமில்லை. அந்த ஸந்நிதானத்தை மட்டும் காரண மென்ருல் எப்போதும் ஸ்ருஷ்டி ஏற்படவேண்டும் அல்லது ஒருபோதும் ஸ்ருஷ்டியேயில்லையென்று ஏற்கவேண்டிவரும்.

## 176 (ஸூ) — அங்கித்வானுபபத்தேச்ச [6]

குணங்களின் ஏற்றத்தாழ்வுகளால் அங்காங்கி பாவத்தைக் கல்பித்து ஜகத்தின் ஸ்ருஷ்டி உன்னல் ஏற்கப்படுகிறது. ப்ரளய தசையிலோ, சமநிலை யிலுள்ள ஸத்வம் முதலிய குணங்களுள் ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்வை யடிப்படையாகக்கொண்ட அங்காங்கிபாவம் கூறுவது பொருந்தாதாதலின், ஜகத்தின் ஸ்ருஷ்டி பொருந்தாது. அந்த நிலையிலும், வேறுபாட்டை ஏற்றுக் கொண்டால், வேறுபாடு ( விசேஷம் ) இன்மையால் எப்போதும் ஸ்ருஷ்டியே ஏற்படும். ஆகையால், ப்ராஜ்ஞனல் அதிஷ்டிதமில்லாத ப்ரதானம் காரண மன்று.

## 177 ஸூ அந்யதானுமிதௌசஜ்ஞ சக்தி வியோகாத் [7]

கூறியதைவிட்டு வேறு வழிகளில் ப்ரதானத்தை அனுமித்தாலும் ப்ரதானத்திற்கு ஜ்ஞாத்ருத்வம் இல்லாமையால் ரசனுனுபபத்தி முதலிய தோஷங்கள் அப்படியேயுள்ளன.

## 178 ஸூ அப்யுபகமேப்யர்த்தாபாவாத் [8]

கேவல ப்ரதானத்தைக் காரணமாக ஏற்றுக்கொண்டாலும், பயனில்லா மையால் அதை அனுமானிக்கவேண்டாம். புருஷனின் போகாபவர்க்கங்களுக் காக ப்ரதானம் ப்ரவர்த்திக்கிறதென்று உங்கள் கருத்து. அது பொருந்தாது. சைதன்யமே ஸ்வரூபமாக ஒரு வியாபாரமுமற்ற புருஷனுக்கு அசேதந தர்மத்தின் அத்யாஸத்தால் ப்ரக்ருதி தர்சனரூபமாக போகமும், ப்ரக்ருதி விவேகரூபமாக அபவர்க்கமும் ஸம்பவிக்கா.

## 179 (ஸூ) விப்ரதிஷேதாச்சாஸமஞ்ஜஸம் [9]

ஒன்ருேடொன்று முரண் பட்ட வாதங்களாலும் இந்த ஸாங்க்யமதம் நேர்மையற்றது. ப்ரக்ருதி – புருஷனின் போகாபவர்க்கங்களுக்காக ப்ரவ்ருத்திக் கிறதென்பது சாங்க்யர் கூற்று. அசேதனமான ப்ரக்ருதிதானே புருஷனிட முள்ள சைதன்யத்தைத் தன்னிடமும், தன்பாலுள்ள கர்த்ருத்வத்தை புருஷ னிடமும் அனுஸந்தானம் செய்து பந்தத்தையடைகிறது, மோக்ஷ ஸாதனத் தையும் அனுஷ்டிக்கிறது என்று கூறுகின்றனர். அசேதனமான ப்ரதானத் துக்கு சேதன தர்மமான அத்தியாஸம் எப்படிப் பொருந்தும் ? இப்படி முரண் பட்ட பேச்சுக்களால் ப்ரதான காரணவாதம் அடியோடு அஸமஞ்ஜஸமாகும்.

இங்கு சாஸ்த்ர யோனித்வாதிகரணத்திற்கும் இவ்வதிகரணத்திற்கும் முரண்பாட்டை நீக்கும் வழி சிறிது விளக்கப்படுகிறது. சாஸ்த்ர யோன்யதி கரணத்தில் அனுமானத்தால் ஈச்வரனைச் சாதிக்கமுடியாதென்று கூறப்-பட்டது. ரசனுனுபபத்யதிகரணத்தில் அசேதனங்களுக்குச் சேதனுதிஷ்டானம் முக்கியமென்றுள்ள வ்யாப்தியால் (நியமத்தால்) அந்தசேதனன் ஈச்வரனே என்று அனுமானத்தால் சாதிக்கப்பட்டது. ஆகவே, இரு அதிகரணங்களுக்கும் முரண்பாடு உள்ளது என்ற சங்கைக்கு விடையாவது: – சாஸ்த்ரயோன்யதி-கரணத்தில் ஈச்வரன் அனுமானத்தால் சாதிக்கமுடியாதவனென்று கூறப்-பட்டது. இங்கு ஈச்வரன் அனுமானத்தாலே பாதிக்கவும் முடியாதவனென்று கூறப்படுகிறது. ஆகவே இரண்டிற்கும் முரணேதுமில்லை. அதாவது எந்த வஸ்து எந்த ப்ரமாணத்தாலே சாதிக்கத்தக்கதோ-அந்த வஸ்துவே அந்த ப்ரமாணத்தாலேயே பாதிக்கவும் தக்கதாகும். ப்ரத்யக்ஷத்தால் காணத்தக்க குடம் அதே ப்ரத்யக்ஷத்தால் தான்பாதிக்கவும் படக்கூடும். ப்ரத்யக்ஷத்திற்கு விஷயமாகாத பரமாணு முதலியவை ப்ரத்யக்ஷத்தால் பாதிக்கப்படமாட்டா. அதேபோல அனுமானத்திற்கு விஷயமாகாத ஈச்வரன் அந்த அனுமானத்தால் சாதிக்கவோ பாதிக்கவோ இயலாதவன் என்பது ஸூத்ரகாரரின் திருவுள்ளம் என்று ஸ்ரீ தேசிகன் “ நன்வத்ராசேதநானும் ” என்று தொடங்கும் ச்லோகத்-தால் அருளிச் செய்கிருர்.

# மஹத்தீர்க்காதிகரணம் [2]

## 180 [ஸூ] மஹத்தீர்க்கவத்வா ஹ்ரஸ்வபரிமண்டலாப்யாம் [10]

அனுமானத்தால் சித்திப்பது ப்ரதானம்போல் பரமாணுவும் ஆதலின், நிரீச்வரஸாங்க்யன் ஏற்ற ப்ரதான காரணத்வத்தைக் கண்டித்தபின் காணுதர் ஏற்ற பரமாணுகாரணவாதத்தை நிரஸனம் செய்கிருர் என்பது ஸங்கதி. ஸேச்வர ஸாங்க்யன் நிராகரிக்க வேண்டாதவன், யோகமதமும் மிக்க



விரோதமில்லாமையால் கண்டிக்கவேண்டியதில்லை. பரமாணுகாரணவாதியான பௌத்தனும் ப்ரதான காரணவாதியான பாசுபதனும் வேதத்தை நம்பாதவர்கள்; ஆதலின், ஸாங்க்யர், வைசேஷிகர்களுக்குப் பின்னர், கண்டிக்கத்தக்கவர்.

காணுதர் கூறும் பரமாணுகாரணவாதம் சரியானதா இல்லையா என்று சம்சயம். பூர்வபக்ஷி - அந்தவாதம் சரியானதே யென்பதற்குக் காரணம் நூல் முதலிய அவயவங்களின் சேர்க்கையாலே துணி முதலிய அவயவிகள் உண்டாகக் காண்பதால் அவயவங்களின் சிறுமை பெருமைகளுக்கேற்ப கடுகிற்கும் மலைக்கும் வேறுபாடு காணப்படுவதாலே அந்த அவயவங்களின் சிறுமைக்கு எல்லையான பரமாணுவே காரணமென்பதாம். இதனைக் கண்டிக்கிருர்.

## (ஸ௦) மஹத்தீர்க்கவத்வா ஹ்ரஸ்வபரிமண்டலாப்யாம்

இதில் 'வா' என்பது 'ச' என்ற பொருளில் உள்ளது. 'அஸமஞ்ஜஸம்' என்று வருவித்துக்கொள்ளவேண்டும். *ஹ்ரஸ்வ பரிமண்டலாப்யாம்.* - மஹத்தீக்கவத் த்வ்யணுகம்போல, பரமாணுக்களால் த்வ்யணுகம், த்வயணுகங்களால் த்ரயணுகம், இவற்றின் உற்பத்தி எவ்வாறு பொருந்தாததோ, அவ்வாறே, அவர்கள் கூறியுள்ள எல்லா விஷயங்களும், அநவஸ்தை முதலிய தோஷங்களால் பொருந்தாதவையே என்று கருத்து. எப்படியென்றுல் நூல் முதலிய அவயவங்கள் நான்குபக்கம்—நான்கு திசைகளிலும் மேலும் கீழுமென்று ஆறுபக்கங்களுடன் சேர்ந்தே (ஒன்ருேடொன்று) அளவில் பெரிய கார்யப்பொருளை - துணி முதலிய அவயவியைப்படைக்கின்றன. அதேபோல் பரமாணுக்களும் ஆறுபக்கங்கள் சேர்ந்தே (ஒன்ருேடொன்று) த்வ்யணுகம் முதலியகார்யங்களை நிறைவேற்றும் (உண்டாக்கும்) என்று சொல்லவேண்டும். அந்த பக்கங்கள் - அவயவங்களையுடையவற்றிற்கே கூடுமாதலின், பரமாணுக்களும் ஸாவயவங்களாகவே இருக்க வேண்டுமென்று ஏற்க நேரிடும். இப்படியேற்ருல், முடிவேயில்லாமல் அநவஸ்தைவரும். எந்தச் சிறு அவயவத்திற்கும் ஓர் அவயவம் உண்டென்று ஏற்கவேண்டிவரும் என்பதால் உன் இஷ்டம், நிறைவேருது.

## 181 (௱௧) உபயதாபி நகர்மாத: ததபாவ: (11)

மற்றும் எது அஸமஞ்ஜஸம் என்ற வினவிற்கு விடைதருகிருர் இந்த சூத்ரத்தில். த்வ்யணுகத்தைப்படைக்கப் பரமாணு செய்யும் முதல் செயல் ஓர் அத்ருஷ்டத்தால் (புண்யத்தால்) செய்விக்கப்படுகிறது என்று ஒப்புக் கொள்கின்றனர். அந்த அத்ருஷ்டம் அணுவில் உள்ளதா? அன்றி ஜீவனிடம்

உள்ளதா - இரண்டிடங்களிலும் அது பொருந்தாது. பரமாணுக்கள் சேருவதற்கான கர்மா (அத்ருஷ்டம்) ஈரிடங்களிலும் உள்ளதாகாது. அத்ருஷ்டம் ஜீவனின் கர்மாவால் உண்டாவதாதலின், பரமாணுவில் அது வராது. அதில் உண்டென்று ஏற்றால் எப்பொழுதும் ஸ்ருஷ்டி நடந்து கொண்டேயிருக்க வேண்டும். ஜீவனிடம் உள்ளதாக ஏற்றுக்கொண்டால் அத்ருஷ்டம் வெவ்வேறு இடத்திலிருப்பதால், பரமாணுவில் கர்மாவை உற்பத்தி செய்யவியலாது. அத்ருஷ்டமுள்ள ஆத்மாவின் சேர்க்கையால் பரமாணுவில் கர்மா உத்பத்தியாகிறதென்றால், அந்த ஸம்யோகம் நித்யமாகை யாலும், எப்போதும் ஸ்ருஷ்டியை ஏற்கநேரிடும். ஆகவே, அதனையேற்க முடியாது. ஏதோ ஒரு சமயத்தில் கர்மா இல்லாமையால் கார்யமான பரமாணுக்களின் சேர்க்கையுமில்லை. ஆகவே பரமாணுச்சேர்க்கை த்வ்யணுகத்திற்குக் காரணமென்பது அஸமஞ்ஜஸம்.

## 182 (ஸூ) ஸமவாயாப்யுபகமாச்ச ஸாம்யாத அனவஸ்த்தே: [12]

கணாதமதம் ஸமவாயம் என்ற சம்பந்தத்தை ஏற்றுக்கொள்வதாலும் அஸமஞ்ஜஸம். ஏனெனில், *ஸாம்யாத* = ஜாதிக்கும், வ்யக்திகளுக்கும் குணங் களுக்கும் - த்ரவ்யங்களுக்கும் இடையே விட்டுப்பிரிக்கமுடியாத நிலைக்கு (அப்ருதக்ஸித்தி) ஹேதுவாக ஸமவாயம் என்ற ஸம்பந்தம் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. அதேபோல், அந்த ஸமவாயத்திற்கும் ஜாதி முதலியவற்றிற்கும் இடையே அதே அப்ருக்ஸித்திக்கு ஹேதுவாக ஒன்று தேவைப்படுகிறது. அங்கார் ஸமவாயம் ஏற்கவேண்டும். இப்படி வ்யவஸ்தை ஏ முடிவேயில்லாமலும போகும். அதற்காக வேறொரு ஸம்பந்தத்தை ஏற்காமல் ஸ்வாப்ருதக்ஸித்தி நிர்வாஹகத்வம் (தன்னை விட்டுப் பிரியாமையைத்தானே ஜாத்யாதிகள் நிர்வஹிப்பவையென்று ஏற்றுக் கொண்டால் போதும். ஸமவாயமெனத்தனி ஸம்பந்தமேற்பது அஸமஞ்ஜஸ மாகும்.

## 183 (ஸூ) நித்யமேவச பாவாத் [13]

ஸமவாய ஸம்பந்தம் நித்யமாயிருப்பதாக ஒப்புக் கொள்வதால் ஸம்பந்திகளும் நித்தியமென்று ஏற்கவேண்டிவரும். ஆகஸமவாயத்தின் ஸம்பந்திகளான ஜாதிவ்யக்த்யாதிகளும், த்ரவ்யகுணாதிகளும், அவயவா வயவிகளும் நித்தியமானவை என்று ஏற்படுவதால் ஒன்றுக்கும் கார்ய காரண பாவமே சித்திக்காது.

## 184 (ஸூ) ரூபாதிமத்வாச்ச விபர்யயோதர்சநாத் [14]

பரமாணுக்களுக்கு ரூபாதிகள் உண்டென ஏற்றுக் கொள்வதாலும், *விபர்யய:* - நித்யத்வம், நிரவயவத்வம் முதலியவற்றிற்கு முரண் ஏற்பட்டு

விடும். *தர்சனாத்-* ரூபாதிகளைக் கொண்ட குடம் முதலியவை அநித்யமாயும், ஸாவயமாயும் காணப்படுவதாலும் காண்பதற்கு ஏற்றபடியே கல்பிப்பதாலும், பரமாணுக்களுக்கு அவர்கள் கூறும் நித்யத்வமும் நிரவயவத்வமும் பொருந்தாது என்பதாம்.

## 185 [ஸூ] உபயதாசதோஷாத் (15)

பரமாணுக்களுக்கு அநித்யத்வாதிகள் வந்துவிடுமேயென்று பயந்து ரூபாதிகளில்லையென்று ஒப்புக்கொண்டால், கார்யத்தின் குணங்களுக்குக் காரண குணம்மூலமென்ற நியமம் சித்திக்காது. அது சித்திக்கவேண்டி பரமாணுக்களுக்கு ரூபாதிகளை ஒப்புக்கொண்டால் அநித்யம் முதலியன வந்துசேரும். ஆகவே இருவழிகளிலும் அஸமஞ்ஜஸமாகும்.

## 186 (ஸூ) அபரிக்ரஹாச்சாத்யந்தமநபேக்ஷா (16)

காபில மதத்தில் ச்ருதி ந்யாய விரோதமிருந்தாலும் ஸத்கார்யவாதிகளான வைதிகர்கள் அதனை ஏற்றுக்கொண்டுள்ளனர். காணாத மதத்திலோ ஒரு அம்சத்தையும் வைதிகர்கள் ஏற்காமையால் அனுபபத்தியாலும், க்ஷேமார்த்திகளால் அடியோடு ஏற்கக்கூடாததாகும்.

## ஸமுதயாதிகரணம் (3)

## 187 [ஸூ] ஸமுதாய உபயஹேதுகேऽபிதத்ப்ராப்தி: (17)

**உபயஹேதுகேऽபி** *ஸமுதாயே:* பரமாணுக்களால் உண்டாகும் ப்ருதிவீ ஸமுதாயத்திலும், ப்ருதிவ்யாதிகளால் உண்டாகும் சரீரேந்த்ரிய விஷய ஸமுதாயத்திலும் *தத் அப்ராப்தி:* ஜகத் ரூபமான ஸமுதாயத்தின் உத்பத்தி கூடாது. ஏனெனில், க்ஷணிகமான பரமாணுக்கள் ஒன்றோடொன்று சேரும் வேளையில் தாமே நசித்துப்போவதால் ப்ருதிவ்யாதி ஸமுதாயத்தை எப்படி உண்டாக்கும். அஸ்திரமானவற்றில் ஸ்திரமென்னும் ப்ரமத்தால் ஸமுதாயத்தின் உத்பத்தி கூடும் என்றால் சுக்தி (சிப்பி)யில் வெள்ளியென்ற ப்ரமத்தால் வெள்ளியின் உத்பத்தி கூடாததுபோல் ஸமுதாய உத்பத்தி கூடாது. ஆகையால், அந்த மதம் அஸமஞ்ஜஸம்.

இவ்விடம் காணாதரும் பௌத்தரும் ஒரேவிதமாய் நான்குவகை பரமாணுக்களை ஒப்புக்கொள்கின்றனர். ஆதலின், காணாதரைக் கண்டித்தும் பௌத்தர் கண்டிக்கப்படுகின்றனர். ஸுகதர் என்னும் பௌத்தரின் சிஷ்யர்கள் நால்வர். அவர்களாவர்:- வைபாஷிகர், ஸௌத்ராந்திகர், யோகாசாரர், மாத்யமிகர் என்பவராம். அவர்களுள் வைபாஷிகர் என்பவர்

ப்ருதிவீ முதலிய ஸ்தூல த்ரவ்யங்கள், ப்ரத்யக்ஷஸித்தங்களென்று கூறுவர். ஸௌத்ராந்திகரென்பவர் - அவை ஜ்ஞானத்தால் அனுமானம் செய்யத் தக்கவையென்று கூறுவர். யோகாசாரர்கள் வெளிப்படையாக (பாக்யங்களான) ப்ரிதிவ்யாதிகளில்லை. ஆந்தரமான ஜ்ஞான ஸந்தானமாத்ரமே ஸத்யம் என்கின்றனர். இம் மூவரும் தாமேற்றுக்கொண்டுள்ள பொருட்கள் க்ஷணிகம் என்பர். மாத்யமிகனே ஸர்வவஸ்துக்களுமே சூன்யம் என்கின்றனர். இதில் வைபாஷிகளும் ஸௌத்ராந்திகளும் கூறும் ஜகத்தின் உத்பத்திப்ரகாரம் நன்கு உபபாதனம் செய்யத்தக்கதா இல்லையா என்று சம்சயம். உபபாதிக்கத் தக்கதே. ப்ருதிவீ, ஜலம், தேஜஸ், வாயுக்களின் பரமாணுக்கள் நான்கும் கந்தம், ரஸம், ரூபம், ஸ்பர்சம் இவற்றையுடையனவாய் ப்ருதிவ்யாதி ரூபங்களாகக் கூடுகின்றன. அவற்றிலிருந்து சரீர இந்திரிய விஷய ஸமுதாயங்கள் உண்டாகின்றன. அதில் ஆந்தரமான விஜ்ஞான ஸந்தானமே ஆத்மாவாகும். இவை க்ஷணிகமேயாயினும் ஸ்திரமென்ற ப்ரமத்தாலே உலகவ்யவஹாரங்கள் கூடும் என்ற பூர்வபக்ஷியை மேற்கண்ட சூத்திரத்தால் கண்டிக்கிறார்.

## 188 (ஸூ-௧) இதரேதரப்ரத்யயத்வாத் உபபன்னமிதிசேந்ந ஸங்காத பாவா நிமித்தத்வாத் (18)

ஸகல வஸ்துக்களும் க்ஷணிகமாயிருந்தாலும் அஸ்திரத்தை ஸ்திர மென்ற ப்ராந்தியாகிய அவித்யையாலே ராகத்வேஷாதிகள் உண்டாகின்றன. அவற்றிலிருந்து ப்ருதிவ்யாதிகள். அவற்றிலிருந்து அவித்யை இவ்வாறு ஒன்றிலிருந்து மற்றொன்றுக ஹேதுவாயிருப்பதாலே எல்லாம் பொருந்து மென்றால் இல்லை. ஸங்காதபாவா நிமித்தத்வாத் - ஸமுதாய பாவத்திற்கு அவித்யை நிமித்தமாகமாட்டாமையால், அஸ்திரத்தை ஸ்திரம் என்ற கார்யத்தை எப்படி உண்டாக்கும். இந்த அவித்யையையுடைய ஆத்மா அப்போதே நசிக்கையாலே யாருக்கு ராகத்வேஷாதிகளை உண்டாக்குகின்றது. ஆதலின், இம்மதம் தவறானது.

## 189 (ஸூ ௨) உத்தரோத்பாதேசபூர்வ நிரோதாத் (19)

உத்தரமான குடமுண்டாகப் போகும் க்ஷணத்தில் முந்தைய மண் பிண்டத்தின் க்ஷணம் நசிப்பதால் உத்திர குடக்ஷணத்திற்கு அபாவமே (சூன்யமே) ஹேதுவென்று சொல்லவேண்டியிருப்பதால் வியாவர்த்தகமான (பிரித்துக்காட்டத்தக்க) விசேஷமில்லாமையால் குடத்தின் க்ஷணத்தால் துணி உண்டாகலாம். அல்லது ஸர்வ ஜகத்தும் உண்டாகலாம் என்பது கருத்து. க்ஷணம் என்ற சொல் க்ஷண்யதே என்ற வ்யுத்பத்தியாலே குடம் முதலியவற்றைக் குறிப்பிடும்.

## 190 [ஸூ] அஸதிப்ரதிஜ்ஞோபரோதோ யௌகபத்யமன்யதா (20)

*அஸதி*: காரணமில்லாமலே கார்யமுண்டாகில், *ப்ரதிஜ்ஞோபரோத:*- அதிபதி, ஸஹகாரி முதலியவைகள் விஜ்ஞானத்தின் உத்பத்திஹேதுவென்று சொல்லுகிற உங்கள் ப்ரதிஜ்ஞைக்குத் தடைவரும். அன்யதா இந்த சங்கையைப் பரிஹரிக்கைக்குப் பூர்வமான குடக்ஷணம் இருந்துகொண்டே உத்தரமான குடத்தின் க்ஷணத்தை உண்டாக்குகிறதென்று சொன்னால், *யௌகபத்யம்*: இரண்டு குடக்ஷணங்களும் ஒரே நேரத்தில் தோன்றக்கூடும். அது உண்மையில் தோன்றுவதில்லை.

## 191 (ஸூ) ப்ரதிஸங்க்யாப்ரதிஸங்க்யா நிரோதாப்ராப்தி ரவிச்சேதாத் [21]

உலக்கையாலடிபட்டு ஸ்தூலமாகத்தோன்றும் குடத்தின் அழிவு ப்ரதிஸங்க்யாநிரோதம் எனப்படும். ஒவ்வோர் க்ஷணத்திலும் கண்களுக்குப் புலப்படாமல் அழிகிற அழிவு குடத்தில் ஏற்படுகிறது. அதை அப்ரதிஸங்கியா-நிரோதம் என்பர். இத்தகைய இருவகை விநாசங்களுக்கும் ப்ராப்தியில்லை. ஏனெனில், *அவிச்சேதாத்*: உத்பத்தி விநாசம் என்னும் தர்மத்தையுடைய மண்கட்டி முதலிய த்ரவ்யங்களுக்கு விச்சேதம் (இடையூறு) இல்லாமையால் ஆகவே மண்கட்டிக்கு அடியகன்றதோர் தோற்றமாதலே குடத்தின் உத்பத்தி, குடம், கபாலம் (ஓடு) போன்ற நிலையடைதலே அழிவு என்பது ப்ரத்யக்ஷமாகத் தோன்றுவதால் கீழ்ச்சொன்ன இருவகை விநாசங்களும் நிரன்வயவி நாசம் எனக்கூடாது. நிரன்வயவிநாசம் என்பது அழிவு ஒரு நிலையிலே அன்வயிக்காமல் (சம்பந்திக்காமல்) இருத்தலென்பதாம். தீபத்தின் நாசம் என்பதும் தீபத்தின் ஸூக்ஷ்மாவஸ்தையேயாகும்.

## 192 (ஸூ) உபயதாசதோஷாத் [22]

உத்பன்னமான த்ரவ்யத்துக்கு துச்சத்வம் (சூன்யத்வம்) சொன்னாலும் துச்சத்திலிருந்தே ஜகத்துக்கு உத்பத்தி சொன்னாலும், ஜகத்தே துச்சம் (சூன்யம்) என்று ஒப்புக்கொள்ள நேரிடும்

## 193 [ஸூ] ஆகாசேசாவிசேஷாத் [23]

ஆகாசத்திலும் துச்சஸ்வரூபத்வம் சொல்லக்கூடாது. *அவிசேஷாத்* ப்ருதிவ்யாதிகளுக்குப்போல் ஆகாசத்திற்கும் அபாதிதமானப்ரதீதிஸித்தத்வம் சமம். ஆகையால் விசேஷமில்லை. அத்ரச்யேன: பததி (இங்கு கழுகுவிழுகிறது) என்று கழுகுவிழுவதற்கு ஆச்ரயமாகவே ஆகாசம் தோன்றுவதால் அதற்குப் பாதகம் இல்லை.

## 194 (ஸூ) அனுஸ்ம்ருதேச்ச (24)

இது அதே குடம் என்று நினைவு (ப்ரத்யபிஜ்ஞை) ஏற்படுவதாலும், குடம் முதலியவை க்ஷணிகம் என்பது தகாது ப்ரத்யபிஜ்ஞை என்பது சென்றகாலத்திலும் நிகழ்காலத்திலும் இருக்கிற ஒரு பொருளைப்பற்றிய ப்ரத்யக்ஷஜ்ஞானம், அதேயிது என்பது போன்றது. அதில் 'அதே' என்பது ஸ்மரணாம்சம் என்றும், இது என்பது க்ரஹணாம்சம் என்றும் கூறவியலாது. அதேயிது என்ற விசேஷண விசேஷ்யபாவத்தால் (ஸாமாநாதிகரண்யத்தால்) க்ரஹணாம்சமே, ஒரு பொருளில் தோன்றுவதால் ப்ரத்யக்ஷரூபம் தான். அதற்குக்காரண ஸாமக்ரீ எது என்றால் முன் அனுபவத்தாலுண்டான ஸம்ஸ்-காரத்துடன் கூடிய இந்திரியங்களின் சேர்க்கை. இதனையுடைய மனிதனுச்கு இந்த ப்ரத்யபிஜ்ஞை வருகிறது. குடம் முதலிய விஷயங்களும், அறிபவனும் க்ஷணிகம் என்றால் இந்த ப்ரத்யபிஜ்ஞை உண்டாகவேமாட்டாது.

## 195 (ஸூ) நாஸதோத்ருஷ்டத்வாத் [25]

அஸத: ந = நசித்துப்போன குடம் முதலியவற்றின் குடத்தன்மை (கடத்வம்) போன்றதர்மமானது குடம் முதலியவற்றினைப்பற்றிய ஜ்ஞானத்தில் ஸங்கமிக்கிறது (ஒட்டிக்கொள்கிறது) என்பதும் பொருந்தாது. ஏனெனில் அத்ருஷ்டத்வாத்: பொருள் நசித்தபின் அதன் தர்மம் மட்டும் வேறொன்றில் ஒட்டிக்கொள்வது என்பது எங்குமே காணப்படாமையால்; ஸௌத்ராந்திகர் கூறுவது:- நீலம் மஞ்சள் முதலிய பலநிற அறிவைக்கண்டு அவ்வறிவுக்கு முன்னிருந்த நீலம் முதலியவை பற்றிய அறிவில் நீலமான குடம் தான் அழியும் போது தன் நீலநிறத்தை ஒப்படைத்துவிட்டு அழிகிறது. பின்னர் நீலக்குடம் முதலியபொருள் அனுமானத்தால் தீர்மானிக்கப்படுகிறது என்பதாம். இத்தகைய மதமும் அஸங்கதமென்பதாம்.

## 196 (ஸூ) உதாஸீநாநாமபி சைவம் ஸித்தி: [26]

வைபாஷிகனுக்கும் ஸௌத்ராந்திகனுக்கும் பொதுவான தோஷம் இந்த ஸூத்திரத்திலே கூறப்படுகிறது. ஏவம்: இப்படி ஸர்வத்ரவ்யங்களுக்கும் க்ஷணிகத்வம் கூறினால், *உதாஸீநாநாமபிஸ்த்திதிஸ்யாத்:* ஒரு முயற்சியுமில்லாதவர்களுக்கும் இம்மை மறுமை பலன்கள் யாவும் ஸித்தித்துவிடும். புண்யகர்-மாக்களை அனுஷ்டித்து புருஷன் க்ஷணிகனாய் நசித்துப் போவதால் அந்தப் புண்ய பலனை வேறொரு மனிதனேயனுபவிக்க நேரிடும். ஆகையால் வைபாஷிக ஸௌத்ராந்திக மதம் அஸமஞ்ஜஸமேயென்று கருத்து.

## உபலப்த்யதிகரணம் (4)

### 197 (ஸூ) நாபாவ உபலப்தே: [27]

இவ்வாறு பாஹ்யார்த்தங்களின் இருப்பைப்பற்றிப் பேசுவோரைக்-கண்டித்து விஜ்ஞானம் மட்டுமே உள்ளதென்னும் யோகாசாரனைக் கண்டிக்கிருரென்று ஸங்கதி. யோகாசாரனின் ஜ்ஞானம் மட்டுமே 'ஸத்' என்கின்ற வாதம், யுக்தமா அயுக்தமா என்ற சங்கையில் யுக்தமென்கிருன் பூர்வபக்ஷி. ஏனெனில், இது குடம், இது வஸ்த்ரம் என்று குடம் முதலியவற்றின் ஜ்ஞானத்திற்கும் பொதுவாக குடம் முதலிய ஆகாரம் தோன்றுகிறது பாஹ்யார்த்தங்களே ஸத் என்பாரும் குடம் முதலியவற்றிலுள்ள குடத்தன்மை (கடத்வம்) முதலியவற்றை குடம் முதலியவற்றின் ஜ்ஞானத்திற்கு ஆகாரமாக ஏற்று, வஸ்த்ரம் முதலியவற்றின் ஜ்ஞானத்திலிருந்து பேதம் சொல்கின்றனர். ஆதலின், குடத்தன்மை முதலியவற்றின் தோற்றம் ஜ்ஞானத்தினுடையனதே தவிர பாஹ்யார்த்தமான குடம் போன்றவற்றினுடையது அன்று. அப்படிப்பட்ட ஆகாரத்தோடு, பாஹ்யார்த்த ப்ரதீதி - குடம் முதலியவற்றிற்கும் ப்ராந்தி ரூபம் என்கின்றனர். இம்மதத்தை இங்கு கண்டிக்கிருர்.

### (ஸூ) நாபாவ: உபலப்தே:

*அபாவ: ந* - ஜ்ஞானத்தைத் தவிர வேறு பதார்த்தமில்லையென்று கூறவியலாது. ஏனெனில், *உபலப்தே:*- நான் குடத்தை அறிகிறேன் என்று குடம் பற்றிய ஜ்ஞானத்திற்குத் குடம் விஷயமாகவும் - ஆத்மா ஜ்ஞாதா - வாகவும் தோன்றுவதால் விஷயங்களையும், ஜ்ஞாதாவையும் இல்லையென்ருல் ஜ்ஞானமும் ஸித்திக்கமாட்டாது.

### 198 (ஸூ) வைதர்ம்யச்ச ந ஸ்வப்வாதிவத் [28]

*ஸ்வப்நாதிவச்ச ந* - ஸ்வப்நத்திலுண்டாகும் ஜ்ஞானம் மித்யா விஷயமானுற்போலவேவென்ருல் விழிப்பில், பெறும் ஜ்ஞானமும் மித்யா விஷயமேயென்பது பொருந்தாது. ஏனெனில், *வைதர்ம்யாத்* - ஸ்வப்ன ஜ்ஞானத்தைக் காட்டிலும் விழிப்புநிலை ஜ்ஞானத்திற்கு வேறுபாடுள்ளமையால். அதாவது ஸ்வப்னஜ்ஞானத்திற்கு நித்ராதி தோஷம் காரணம். ஸ்வப்னத்திற்குப் பிந்திய நிலையில் இல்லையென்கிற பாதகமான எண்ணமுமுள்ளது. விழிப்பு நிலை ஜ்ஞானத்திற்கு இவ்விரண்டும் இல்லை. இவ்வாறு தோஷமற்று பாதகமும் அற்றுள்ள குடம் முதலியவை பற்றிய ஜ்ஞானத்தை மித்யாவிஷயம் (அஸத்யவிஷயம்) என்று கூறுவது அயுக்தம். 'ச' காரத்தால் ஸ்வப்ன பதார்த்த ஜ்ஞானமும் யதார்த்த விஷயகம் என்று சூசிக்கப்படுகிறது.

## 199 (ஸூ) நாபாவோऽநுபலப்தே: [29]

*அபாவ:* ந. - பொருளற்ற (அர்த்த சூன்யமான) ஜ்ஞானத்திற்கு இருப்பும் உண்மையுமில்லை - ஏனெனில், *அனுபலப்தே:*-ஓரிடத்திலும் அது தென்படாமையால் பாதிக்கப்படாத ப்ரதீதியால் ஸித்தமான அர்த்தத்தைக் கழித்துவிட்டால். ஜ்ஞானத்தையும் கழிக்க நேரிடும் என்பது கருத்து.

## ஸர்வதானுபபத்யதிகரணம் [5]

## 200 (ஸூ) ஸர்வதானுபபத்தேச்ச [30]

ஸுகதமதத்தினர் கூறும் ஸர்வசூன்யத்வ வாதத்தை இதில் நிரசனம் செய்கிறார்.

மாத்யமிகன் சொன்ன ஸர்வ சூன்யவாதம் கூடுமா, கூடாதாவென்ற சம்சயமெழ - பூர்வபக்ஷீ கூடும் என்று வாதிக்கிறான். மண்கட்டி முதலியவற்றைப் பிசையாமல் குடம் முதலியவற்றையுண்டாக்கவியலாது. பிசைந்தாலோ கட்டி நசித்து விடுகிறது ஆகவே பிண்டபாவத்தால் உண்டான - குடம் முதலியவை அபாவாத்மகங்களேயென்று கொள்ளுவதுதான் பொருத்தமானது என்கிறான். அதனைக் கண்டிக்கிறார்.

சர்வ சூன்யவாதி ஸர்வத்தையும் ‘ஸத்’ என்று ப்ரதிஜ்ஞை செய்து தன் விருப்பத்தைச் சாதிக்கிறானா - அன்றி அஸத் என்று கூறி சாதிக்கிறானா? அல்லது வேறு வழியிலா? *ஸர்வதா*=எல்லா வகைகளாலும் அவன் கூறும் ஸர்வ சூன்யத்வம் ஸித்திக்காது. *அனுபபத்தே:*- எவ்விதத்திலும் அனுபபத்தியிருப்பதால், பாவம், அபாவம் என்ற சொற்கள் ஒரு பொருளின் அவஸ்தா விசேஷத்தையே குறிப்பவையென்று முன்னரே நிருபித்துள்ளோம்.

மண் - அகன்ற அடிபாகத்தையும் மத்ய பாகத்தையுமுடைய பாத்திரமாக மாறும் அவஸ்தையே குடம் இருக்கிறது, என்ற புத்திக்கு விஷயமாகிறது. மண் கட்டி நிலை இங்கு குடம் தோன்றப்போகிறது என்ற புத்திக்கு விஷயம் - பானையின் ஓடு, குடம் அழிந்தது என்ற புத்திக்கு விஷயமாகிறது. ஆகவே உள்ள பொருளின் தர்மமே ஸத்த்வமும் - அஸத்த்வமும் என்று விளக்குவதால் நீ கூறும் சர்வ சூன்யத்வ வாதம் சித்திக்கமாட்டாது.

## ஏகஸ்மின்னஸம்பவாதிகரணம்

## 201 (ஸூ) நைகஸ்மின்ன ஸம்பவாத்

அஸத்துக்கு அஸத்யத்வம் சொல்லும் வாதியைக் கண்டித்து - சத்யத்வத்தையும் அசத்யத்வத்தையும் சேர்த்துச் சொல்லும் ஜைனமதத்தைக் கண்டிக்கிறாரென்று ஸங்கதி.

ஜைனமதம் யுக்தமா? அயுக்தமா? என்ற சம்சயத்தில் யுக்தமேயென்று பூர்வபக்ஷம். ஏனெனில், ஜீவன் என்றும், அஜீவனென்றும் கூறப்படும் முழு ஜகத்தும், ஸத்தாயும், அஸத்தாயும், நித்யமாயும், அநித்யமாயும், பின்னமாயும், அபின்னமாயும் உள்ளது எனத் தோன்றுகிறது. த்ரவ்யஸ்வரூபம் ஸ்திரமாயும் ஏகமாயும் இருக்கும். கடத்வம், கபாலத்வம் போன்ற பர்யாயங்களான அவஸ்தைகளாலே அனேகமாயும், அஸத்தாயும், அஸ்திரமாயிருக்கும். அதனுல் இந்த மண் குடம், இந்த மண்கபாலம் (ஓடு) இது முதலிய ப்ரதீதி (எண்ணம்) தோன்றும் என்ற பக்ஷத்தை நிரஸிக்கிருர். **நைகஸ்மின் அஸம்பவாத்** என்ற சூத்திரத்தாலே ந:- ஜைனமதம் பொருத்தமானதல்ல; ஏனெனில், **ஏகஸ்மின் அஸம்பவாத** - ஒரு த்ரவ்யத்தில் ஒரே சமயத்தில் ஒன்றுக்கொன்று முரணுன தர்மங்கள் சம்பவிக்காதவையென்பதால் குடம்-வாணுய் முதலியவற்றின் பேதங்களும், ப்ருதிவியின் ப்ரதேச பேதத்தால் அல்லது ஒரு ப்ரதேசத்திலே பேதாபேதாச்ரயத்வமில்லை. ஆதலின், ஒரு வஸ்துதானே இருவடிவுள்ளதாக இருக்கும் என்பது சரியில்லை.

## 202 (ஸூ) ஏவஞ்சாத்மாகார்த்ஸ்ன்யம் (32)

இப்படி ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் ஆத்மாவுக்கு அகார்த்ஸ்ன்யம் வந்துவிடும். அதெப்படியென்ருல், ஆத்மாவே சரீர பரிமாணணுயிருக்கிருன் என்று ஜைனமதம் - அப்படியாகில், யானையின் உடலில், உள்ள ஜீவன் கொசுவின் உடலில் நுழைகையில் ஆத்மாவுக்கு அகார்த்ஸ்ன்யம்-அபூர்ணத்வம் வரக்கூடும்.

## 203 (ஸூ) நச. பர்யாயாதப்யவிரோதோ விகாராதிப்ய: (33)

***நசபர்யாயாதபி அவிரோத:***- ஆத்மாவுக்கு அல்பத்வாவஸ்தையென்னும் பர்யாயத்தாலும் கீழ்க் கூறிய விரோதம் வராதென்பது பொருந்தாது. ஏனெனில், ***விகாராதிப்ய:*** குடம் முதலியவற்றிற்கும் போலவே ஆத்மாவுக்கும் பெருமை சிறுமை முதலிய விகாரங்கள் என்னும் தோஷம் ஸம்பவிக்கக் கூடுமாகையால் அவஸ்தாபேதத்தை ஏற்ருலும் ஆத்மாவுக்குத் தோஷத்தைப் பரிஹரிக்க முடியாது என்றபடி.

## 204 (ஸூ) அந்த்யாவஸ்திதேச்ச உபயநித்யத்வாதவிசேஷ: (34)

*அந்த்யாவஸ்திதேச்ச* - ஜீவனுக்கு மோக்ஷ தசையில் வரக்கூடிய இறுதியான பரிமாணம் பிற்பாடு ஒரே விதமாக இருப்பதால் - ***உபய நித்யத்வாத்*** ஆத்மஸ்வரூபமும் - அந்திய (இறுதிப்) பரிமாணமும் நித்யமாயும் இருப்பதாலும் ***அவிசேஷ*** - முன் தசையிலும் பின் தசைபோல் ஆத்மஸ்வரூப பரிமாணங்கள்

இருக்கவேண்டியவையாதலால், ஆத்மாவுக்கு தேகம் போன்ற பரிமாணம் என்ற விசேஷம் இல்லை. ஆகையால், ஜைனமதம் பொருந்தாதென்பதாம்.

## பசுபத்யதிகரணம்

## பசுபதிமதத்தில் ப்ரக்ருதி (35)

காரணம் என்று ஒப்புக்கொண்டாலும்

காணுத சாக்ய பாஷண்டை: த்ரயீதர்மோ விலோபித: என்கிறபடியே வேதத்தை ஏற்காதவர்களுடன் சேர்ந்திருப்பதால் ஜைனர்களைக் கண்டித்ததும் பசுபதி மதத்தைக் கண்டிக்கிருர் என்று ஸங்கதி. பசுபதியால் இயற்றப்பட்ட மதம் முமுக்ஷுக்களால் ஆதரிக்கத்தக்கதா? அல்லவா? என்று சங்கையில் ஸர்வஜ்ஞுன ருத்ரனுல் இயற்றப்பட்டதாதலின், ஆதரிக்கத் தக்கதே யென்பது பூர்வபக்ஷம். அதனையிங்கு நிரஸனம் செய்கிருர்.

### 205 (ஸூ) பத்யுரஸாமஞ்ஜஸ்யாத் (35)

நைகஸ்மின்ன ஸம்பவாத் என்றும் ஸூத்ரத்திலிருந்து 'ந' என்பதை வருவித்துக் கொள்ளவேண்டும். *பத்யு:* பசுபதியின் மதம் சரியல்ல; அஸாமஞ் ஜஸ்யாத் வேதாந்த ஸித்தனை பரமபுருஷனை கீழானவனுகவும், ருத்ரனை நிமித்தகாரணமாகவும் கள்குடத்தை ஸ்தாபிப்பது போன்ற வேத விருத்தமான ஆசாரங்களை விளக்குவதாலும் பசுபதி மதம் அஸமஞ்ஜஸமாதலின் ஆதரிக்கத் தக்கதாகாது.

### 206 (ஸூ) அதிஷ்டாநாநுபபத்தேச்ச (36)

அனுமான ஸித்தனை பசுபதியென்னும் ஈச்வரன் ப்ரதானத்தை அதிஷ்டிக்கிருனென்று சொல்வதால் சரீரமுள்ள குயவன் போன்றவனுக்கே மண்ணுருண்டை முதலியவற்றை அதிஷ்டித்தல் காணப்படுவதால் சரீரமற்ற ப்ரதானத்தை யதிஷ்டித்தல் தகாது. அதற்காக பசுபதிக்கு சரீரத்தை ஒப்புக்கொண்டால் ஸாவயவமான சரீரத்திற்கு ஓர் காரணம் அபேக்ஷிக்கப்படுவதால் ஓர் முடிவுமிராமல் போகும்.

### 207 (ஸூ) கரணவச்சேந்ந போகாதிப்ய: (37)

*கரணவத் சேத் ந* - க்ஷேத்ரஜ்ஞன் (ஜீவன்) சரீர மின்றியே தன் கரண களேபரங்களை அதிஷ்டிப்பது போலவே பசுபதியும் அதிஷ்டிக்கலாம் என்பது தகாது. *போகாதிப்ய:* - அவ்வாறே க்ஷேத்ரஜ்ஞனைப் போல பசு பதிக்கும் புண்யபாப ரூப கர்ம பல போகாதிகள் வந்து சேரும்.

## 208 (ஸூ) அந்தவத்த்வம் அஸர்வஜ்ஞதாவா (38)

வா என்பது உம் (ச) என்ற பொருளினது, பசுபதிக்குப் புண்யா புண்யங்கள் உண்டு என்றால், அந்தவத்த்வமும் (விநாசம்) ஸ்ருஷ்டிக்கும் ஸம்ஹாரத்திற்கும், விஷயமாதலும் ஸர்வஜ்ஞத்வமின்மையும் ஏற்படும் ஆகையால் பசுபதி மதமும், அஸமஞ்ஜஸம்.

### உத்பத்யஸம்பவாதிகரணம்

பகவான் ஸ்ரீமன் நாராயணன் அருளிய ஸ்ரீ பாஞ்சராத்ர தந்திரத்திலும் காபிலாதி மதத்தில் போலவே அப்ரமாணத்வத்தைச் சங்கித்து நிரஸிக்கிறு ரென்று ஸங்கதி.

## 209 (ஸூ) உத்பத்யஸம்பவாத் (39)

ஸாங்க்யாதி தந்த்ரம் போலவே பாஞ்சராத்ரமும் ப்ரமாணமா, இல்லையா? என்ற ஸம்சயத்தில் அப்ரமாணம் என்று பூர்வபக்ஷம். ஏனெனில் வாஸுதேவாத் ஸங்கர்ஷணோ நாம ஜீவோ ஜாயதே என்று ச்ருதிக்கு விருத்தமான ஜீவோத்பத்தியைச் சொல்வதாலே பாஞ்சராத்ரம் ப்ரமாணம் இல்லை. நான்கு வேதங்களிலும் புருஷார்த்தத்தை அடையப் பெருதவர் என்று வேதத்தினை அலக்ஷ்யப்படுத்திப் பேசுவதாலும் இது அப்ரமாணமே என்கிறுர்.

*சித்தாந்தம் கூறுமுன்னர் இரண்டு பூர்வபக்ஷ ஸூத்ரங்கள்*

### (ஸூ) உத்பத்த்யஸம்பவாத்

'நஜாயதே ம்ரியதேவா விபச்சித்' என்ற ச்ருதியில் ஜீவனுக்கு உத்பத்தியை இல்லையென்று சாதித்திருப்பதால் பாஞ்சராத்ரத்தில் ஜீவனுக்கு உத்பத்தி கூறுவது வேத விருத்தமாதலின் அப்ரமாணமே. மேலும்,

## 210 (ஸூ) நசகர்த்து:- கரணம் (40)

ஸங்கர்ஷணுத் ப்ரத்யும்ன ஸம்ஜ்ஞம் மன: உத்பத்யதேயென்று மனஸ்ஸுக்கு ஸங்கர்ஷணனெனப் பெயர்கொண்ட கர்த்தாவாகிய ஜீவனிடம் உற்பத்தி கூறுவது ச்ருதிக்கு விருத்தமாகையாலும், பாஞ்சராத்ரம் அப்ரமாணம் - *கர்த்து: கரணம் நச* - கர்த்தாவான ஜீவனிடத்திலிருந்து மனம் ஸர்வேந்த்ரியாணிச என்று மனஸ் ப்ரஹ்மத்திடம் தோன்றுவதாகவேச்ருதி சொல்கிறது. என்று இந்த பூர்வ பக்ஷத்தை அடுத்த சூத்ரங்களால் கண்டிக்கிறுர்.

## 211 (ஸூ) விஜ்ஞாநாதி பாவேவா ததப்ரதிஷேத: (41)

'வா' சப்தம் பூர்வபக்ஷத்தை விலக்கிக் காட்டுகிறது. விஞ்ஞானஞ்ச தத் ஆதிச விஜ்ஞாநாதி என்று விக்ரஹம். அதனால் விஞ்ஞாநாதியென்பது ஜ்ஞானமே - ஸ்வரூபமாய்க் கொண்ட ஜகத் காரணமான பரவாசுதேவனைச் சுட்டுகிறது. அதன் பாவம் விஜ்ஞாநாதி பாவம் - அவனின் அவதார ரூபமாய் இருத்தலாம். ஆகவே ப்ரத்யும்ந, அநிருத்த, ஸங்கர்ஷணர்கள்' விஜ்ஞான ஸ்வரூபமாய் ஜகத்தின் ஏககாரணமான பரப்ரஹ்மத்தின் அவதார ரூபமே யென்பது ஸித்தம். அதைத் தடுக்கவில்லை, அந்த விஷயத்திற்கு ப்ராமாண்யத்தைத் தடுக்கவில்லை. முழு பாஞ்சராத்ர சாஸ்திரமும், பிரமாண தமம் என்பதாகிறது. அஜாயமாநோ பஹுதா விஜாயதே என்று பிரசித்தமான பரம புருஷனின் சுயேச்சையான அவதாரமேயல்லவா? வாசுதேவாத். ஸங்கர்ஷணோ நாமஜீவோ ஜாயதே - ஸங்கர்ஷணாத் ப்ரத்யும்ன ஸம்ஜ்ஞம் மநோ ஜாயதே இத்யாதிகளாலே சொல்லப்படுகிறது. ஜீவனின் உத்பத்யாதிகள் பற்றிச் சொல்லவில்லை. இங்கு ஜீவாதி சப்தங்கள் விசேஷ்யங்களாயும், ஸங்கர்ஷணாதி சப்தங்கள் விசேஷணங்களாயும் இருக்கும் என்கின்றனர். பூர்வ பக்ஷிகள். ஸித்தாந்தத்தில் ஜீவனின் அதிஷ்டாதாவான ஸங்கர்ஷணன் என்றும் பொருள். ஸங்கர்ஷணாதிபதங்கள் விசேஷ்யங்கள் - ஜீவாதி பதங்கள் விசேஷணங்களேயென்று கருத்து. நான்கு வேதங்களிலும் புருஷார்த்தங்கள் கிட்டவில்லையென்பது, ' உதயத்திற்குமுன் ஹோமம் செய்பவர் பொய்பேசுபவராம் என்ற' வேதவாக்யம், உதயத்திற்குப் பின் அக்னி ஹோத்ரம் செய்வதைப் போற்றவந்த அர்த்தவாதம் என்பதுபோல் பாஞ்சராத்ரம் சிறந்ததுஎன்பதைக் காட்டவேயாகும். அதாவது - வேதாந்தத்தில் கூறப்பட்ட பரமபுருஷனின் உபாஸனத்தையும், அவனையர்ச்சிப்பதையும் பாஞ்சராத்ரத்தில் விளக்குவதால், அது முழுவதும் ப்ரமாணமே என்று சித்தம்.

## 212 (ஸூ) விப்ரதிஷேதாச்ச: (42)

இந்த பாஞ்சராத்திரத்திலும் ஜீவனின் உத்பத்தியை விசேஷமாக நிஷேதித்திருப்பதால் இது வேதத்திற்கு முரணற்றது.

> அசேதநா பரார்த்தாச நித்யாஸததவிக்ரியா ।
> த்ரிகுணா கர்மிணாம் க்ஷேத்ரம் ப்ரக்ருதே ரூபமுச்யதே ॥
> வ்யாப்திரூபேண ஸம்பந்த: தஸ்யாச்ச புருஷஸ்யச ।
> ஸஹ்ய நாதி ரநந்தச்ச பரமார்த்தே நிச்சித: ॥

என்று பாஞ்சராத்ரத்திலே ஜீவனுக்கு உத்பத்தி நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் ச்ருதியுடன் சிறிதும் முரண்பாடேயில்லை. கீழே பூர்வபக்ஷிகள்

கூறிய முக்தி ப்ரகாரத்தை விளக்க ஸ்வாமி தேசிகன் அருளிய ச்லோகத்தின் கருத்து. ஸ்வாதந்த்ர்யம், பசுபதி ஸமத்வம், இவ்விரண்டும் பாசுபத பேதங்கள் - முக்தியில் ப்ரகாரங்கள். ப்ரஹ்மத்துடன் ஐக்கியமும், அவித்யா நிவ்ருத்தியும் அத்வைதிகள் கூறும் முக்திப்ரகாரங்கள், பௌத்தரில் ஒரு சாரார் விஷய வாஸனை தொலைவதேயது என்பர். ப்ரபாகரர் மதத்தினர் மித்யா ஜ்ஞான ஸந்ததியின் அழிவேயது என்பர். நையாயிகரில் சிலர் தன்புத்தி சுகங்களுக்கு நித்தியம் நெருக்கமான நிலையே முக்தியென்பர். பாட்டர்கள் (சில மீமாம்சகர்கள்) சித்தத்தால் தன் ஆத்ம ஸௌக்யத்தை அனுபவித்தலே முக்தியென்பர். காணாதர்கள் பாஷாணம் (கல்) போன்றது முக்தியென்பர். ஜைனர்களோ நித்தியம் மேல் நோக்கிப் பயணம், அனைத்து மக்களின் மத்தகத்தினுடன் கூடிய சரீரப்ரவேசமே முக்தியென்பர். சூன்யாத்வைதமே. முக்தியென்பது மாத்யமிகர் கூற்று. கேவலம் ஆத்மானந்தானுபவம் முக்தி என்பர் - சாங்கியர்கள்; உபாதி நிவ்ருத்தியே முக்தியென்பர் - யாதவ பாஸ்கர மதத்தினர். தேக விச்சேதம், ஆயிரம் யுவதிகளையனுபவிப்பதே முக்தியென்பர் சார்வாகர். இவ்வாறு விதவிதமான முக்திகளைக் கூறும் உங்களுக்கெல்லாம் ச்ருதி உபகரிக்கட்டும் என்று இகழ்ச்சியாக இந்தச் ச்லோகம் உள்ளது (ஸ்வாதந்த்ர்யம், ப்ரஹ்மணைக்யம் ... ... ... ... ... கல்பதாம் ஜல்பதாம் வ: (அதிகரணசாராவளி). கீழ்ச் சொன்ன முக்தி ப்ரகாரங்கள் அனைத்திற்கும் ச்ருதி, ஸ்ம்ருதி, அனுமானம் யாவுமே பாதகங்கள் என்பது கருத்து.

## இந்த பாதத்தில் எட்டு அதிகரணங்களின் பொருள் வருமாறு:-

" பாதே஽ஸ்மின் காபிலஸ்தை: ... .. .. ... . பஞ்சமாம்நாயதர்சீ "

| அதிகரணங்கள் | | விஷயங்கள் |
|---|---|---|
| 1. ரசனானுபபத்தி | ... | காபிலர்கள் செய்த விரோதம் |
| 2. மஹத்தீர்க்கம் | ... | காணாதர்கள் செய்த விரோதம் |
| 3. ஸமுதாயம் | ... | வ்ருத்த வைபாஷிகள் செய்த விரோதம் |
| 4. உபலப்தி | ... | யோகாசாரர் செய்த விரோதம் |
| 5. ஸர்வதானுபபத்தி | ... | மாத்யமிக சூன்யவாதப்ரஸக்தி |
| 6. ஏகஸ்மின்னஸம்பவம் | ... | ஜைனர்கள் செய்த விரோதம் |
| 7. பசுபதி | | பசுபதிமதஸ்தர் செய்த விரோதம் இவற்றைக் கண்டித்துப் பின்னர் |
| 8. உத்பத்யஸம்பவம் (பாஞ்சராத்ரம்) | ... | பாஞ்சராத்ரமே வேதமார்க்கானுஸாரியென்று ஸ்தாபித்தார். |

ஸ்ரீமத் பாரதத்தில் ஆனுசாசனிகபார்வம் - ஜ்ஞான காண்டத்தில் பல ச்லோகங்களால் முழுவதும் பாஞ்சராத்ரம் ப்ரமாணம் என்று ஸ்தாபித்த ஸ்ரீ வ்யாஸர் பாஞ்சராத்திரத்தின் ஓர் பகுதி அப்ரமாணம் என்று சொல்கிறுர் என்பது பொருந்தாது. தன் சொல்லுடன் முரணுனதுமாகும். ஆகையால், பாஞ்சராத்திரத்தில் ச்ருதி விரோதத்தை அங்கீகரித்து விரோதமில்லாத அம்சம் மட்டும் ப்ரமாணமென்று இங்கு ஸித்தாந்தம் கூறப்படுகிறது என்று சங்கரர் கூறுவது கண்டிக்கப் பட்டதாகிறது என்பது ஸ்ரீ பாஷ்யகாரரின் திருவுள்ளம்.

இரண்டாம் அத்தியாயம் இரண்டாம்பாதம் முற்றியது.

## இரண்டாமத்யாயம் - மூன்றும் பாதம்

## வியதரீகரணம் (1)

### 213 (ஸூ) நவியதச்ருதே: [1]

வேத பாஹ்யங்களான ஸாங்க்யாதி தந்த்ரங்கள் ந்யாயாபாஸத்தை மூலமாகக்கொண்டவை, முன்பின் முரண்பாடுள்ளவை என்பதால் ஸமமெனனப் பட்டன. இந்த பாதத்தில் தன் பக்ஷத்திற்கு தோஷலேசமும் இல்லை என்று காட்ட ப்ரஹ்மத்தின் கார்யமான சித் அசிதாத்மகமாம் ப்ரபஞ்சத்திற்குக் கார்யத்வம் எந்தவகையில் என்பது நிருபிக்கப்படுகிறது என்பது பாதஸங்கதி.

ஸ்ரீ பாஞ்சராத்ராதிகரணத்தில் ஜீவனின் உத்பத்திவாதமானது ஜீவனுக்கு அபிமானியான ஸங்கர்ஷணுதிகளைக் குறிப்பது ஆதலின், உபசார வழக்கெனப்பட்டது. அப்படியாகில் அதே ந்யாயத்தில் ஆகாசத்திற்கு உத்பத்திவாதமும் உபசார வழக்காகட்டுமே என்று சங்கையால் அதிகரணம் எழுகின்றதென ஸங்கதி.

ஆகாசம் உண்டாகிறதா இல்லையா என்று சம்சயம். அது உண்டாவதில்லை. அச்ருதே: ஆத்மாவைப்போல் நிரவயமான ஆகாசத்திற்கு உத்பத்தி எங்கும் கேட்கப்படாமையால் என்ற பூர்வபக்ஷத்தை கண்டிக்கிறுர்.

### 214 (ஸூ) அஸ்திது [2]

'து' என்பது பக்ஷம் மாறுவதைக் காட்டுகிறது. அஸ்தி ஆகாசத்திற்கு உத்பத்தியுண்டு. ஏனெனில், ஆத்மன ஆகாசஸ் ஸம்பூத: என்று உத்பத்தி ச்ரவணத்தாலே ப்ரமாணுந்தரத்தால் அப்ராப்தமான ஆகாசத்தின் உத்பத்தியை ச்ருதி விளக்குவதால் வஹ்னிநு ஸிஞ்சேத் (நெருப்பினுல் நனைக்க வேண்டும்) என்பது போலே இதற்குத் தகுதியின்மை (அயோக்யதை) இல்லை என்று கருத்து.

## 215 (ஸூ) கௌண்யஸம்பவாத் சப்தாச்ச [3]

மேலும் பூர்வபக்ஷத்தை உபந்யஸிக்கிறார். ஆத்மன: ஆகாச: ஸம்பூத: என்கிற ச்ருதி கௌணீ; முக்கியப் பொருளற்றது, உபசாரவழக்கு. ஸூக்ஷ்மாவஸ்தமான தன்னிடமிருந்து ஸ்தூலாவஸ்தமான தானுண்டாகிறது என்ற முக்கியமற்ற அர்த்தத்தைக் கூறுகிறது. ஏனெனில், அஸம்பவாத் - தத்தேஜோऽஸ்ருஜத என்று ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கு முன்பு தேஜஸ்ஸு உண்டாகிறது - என்பதால் சப்தாச்ச - வாயுச்சாந்தரிக்ஷஞ்ச ஏததம்ருதம் என்று ஆகாசத்துக்கு அம்ருதத்வ சப்தத்தாலேயும் வியதுத் பத்தி கௌணி யாகும். (உபசாரவழக்கு)

## 216 (ஸூ) ஸ்யாச்சைகஸ்ய ப்ரஹ்ம சப்தத்வத் [4]

ஏகஸ்ய ஸ்யாச்ச: - ஆத்மந: ஆகாசஸ்ஸம்பூத: ஆகாசாத்வாயு: வாயோரக்னி: முதலிய இடங்களில் அனுஷக்தமாய்க் கொண்டுள்ள ஒரு ஸம்பூத சப்தத்திற்கு ஆகாச: ஸம்பூத: என்பதில் கௌணத்வமும் *வாயுஸ்ஸம்பூத* என்பதில் அனுஷக்தமான அதே பதத்திற்கு முக்யத்வமும் இருக்கலாம். *ப்ரஹ்ம சப்தவத்தஸ்மாதேதத்* ப்ரஹ்ம நாமருபம் அன்னஞ்ச ஜாயதே தபஸாசீயதே ப்ரஹ்ம என்ற இடங்களில் ப்ரதானத்தில் கௌண மாகவும், பரப்ரஹ்மத்தில் முக்யமாகவும் கொள்வதுபோலவே இதுவும் கூடலாம் என்பது பூர்வபக்ஷ ஸூத்ரம். இந்த சங்கையை மேல் நிரஸனம் செய்கிறார்.

## 217 (ஸூ) ப்ரதிஜ்ஞாஹாநி - அவ்யதிரேகாத் [5]

'யேநாச்ருதம் ச்ருதம்பவதி' என்று சொன்ன ப்ரஹ்ம விஜ்ஞானத் தாலே ஆகாசம் முதலிய ஸர்வ விஜ்ஞான ப்ரதிஜ்ஞைக்கு அஹாநி: தடை (ஹானி) இல்லை. அவ்யதி ரேகாத் - ஆகாசமும் ப்ரஹ்மத்திடம் தோன்றிய தாதலின், ப்ரஹ்ம காரியமான ஜகத்தில் அந்தர்ப் பூதமாகையாலே உப பன்னமேயாகும் என்பதாம்.

## 218 (ஸூ) சப்தேப்ய: [6]

"ஐததாத்ம்யமிதம் ஸர்வம்" என்ற ச்ருதியிலே ப்ரஹ்மத்துக்கு ஸ்ருஷ்டிக்கு முன்பு ஏகத்வத்தை உறுதிப்படுத்தலையும், ஸர்வாத்மத்வாதி களையும் சொல்லும் சப்தங்களாலேயும் ஆகாசத்திற்கு உத்பத்தியுண்டென்று தோன்றுகிறது. "தத்தேஜோऽஸ்ருஜத" என்கிற வாக்யத்திலே ஆகாசத் திற்கு உத்பத்தி கூறப்படவில்லையென்பது வேறு ச்ருதியால் விளக்கப்பட்ட அதன் உத்பத்தியைத் தடுக்கமாட்டாதென்பது கருத்து.

## 219 (ஸூ) யாவத்விகாரந்து விபாகோ லோகவத் [7]

சாந்தோக்யத்தில் தத்தேஜோऽஸ்ருஜத என்று தேஜஸ்ஸுக்கு ஸ்ருஷ்டி சொன்னதுபோல ஆகாசத்திற்கு வெளிப்படையாகக்கூறப்படவில்லே. அப்படி இருந்தாலும் அங்கேயே ஜததாத்ம்யமிதம் ஸர்வம் என்று *யாவற்றும்* - ஸமஸ்த ஜகத்தும் - ப்ரஹ்மத்தின் விகாரம் என்றே கூறப்பட்டுள்ளமையால், *விபாக:*- உத்பத்தி சொல்லப்பட்டதாகிறது. லோகவத் - உலகில் யாவரும் தேவதத் தனின் புதல்வர்கள் என்று சொல்லிப் பின் குறிப்பிட்ட சிலரைமட்டும் சுட்டி இவர்கள் தேவதத்த புத்ரர்களேயென்று சொன்னல், மற்ற எல்லோரும் அவன் புதல்வர்களே என்பதைக் காட்டுவதாகிறது. அதுபோல் இங்கும் க்வசித் - தேஜஸ்ஸுக்கு உத்பத்தி சொன்னது - ஆகாசத்தின் உத்பத்தியையும் காட்டு வதற்கேயாகுமென்று அபிப்பிராயம்.

## 220 (ஸூ) ஏதேந மாதரிச்வாவ்யாக்யாத [8]

*ஏதேந* - ஆகாசத்திற்குக்கூறின நியாயத்தாலே, *மாதரிச்வா வ்யாக்யாத :* வாயுவும் விளக்கப்பட்டது. ப்ரஹ்மத்தின் கார்யமே என்று கூறப்படுகிறது. மேலே தேஜோऽத: ததாஹ்யாஹ என்ற ஸூத்ரத்திலே ‘ அத: ’ என்ற சொல்லாலே வாயுவை ப்பராமர்சிக்கைக்காக ஏதேந மாதரிச்வா வ்யாக்யாத: என்று தனி ஸூத்ரம் செய்தார் என்பது கருத்து.

## 221 (ஸூ) அஸம்பவஸ்து ஸதோऽனுப பத்தே [9]

‘ து ’ என்பது ஏவகாரப் பொருளில் வந்தது. *ஸதஸ்து அஸம்பவ:* ஸத் என்ற ப்ரஹ்மத்திற்கு உத்பத்தி அஸம்பவ: - இல்லாமை - ப்ரஹ்மத்தைத் தவிர வேறு எதற்கும் உத்பத்தியில்லாமை கூறமுடியாது, என்பதாயிற்று. அனுபவத்தே - ஏக - விஜ்ஞானத்தால் ஸர்வ விஜ்ஞானம் என்ற ப்ரதிஜ்ஞைக்கு அனுபபத்தி வாராமைக்காக ப்ரஹ்மத்தைத் தவிர்த்த ஆகாசாதி ஜகத்து முழுவதற்கும் உத்பத்தி சித்தித்தது.

### தேஜோऽதிகரணம் (2)

## 222 (ஸூ) தேஜோऽதஸ்ததாஹ்யாஹ [10]

மஹத் முதலியவற்றிற்கும் ப்ரக்ருத்யாதிகளேச் சரீரமாகக் கொண்ட ப்ரஹ்மத்திலிருந்து உத்பத்தியை இவ்வதிகரணத்தில் சாதிக்கிருர் என்று ஸங்கதி. நான்கு ஸூத்ரங்கள் பூர்வ பக்ஷம், ப்ரஹ்மத்தால் அனுப்ரவேசிக்கப் பட்ட மஹான் அஹங்காரம் முதலிய கார்யங்கள் தனிப்ரக்ருதி முதலிய வற்றிலிருந்து உண்டாகின்றனவா? அல்லது ப்ரக்ருதியை சரீரமாகக் கொண்ட

பரமாத்மாவிடத்திலிருந்து உண்டாகின்றனவா, இவ்வாறு ஆகாசாத்வாயு: என்றவிடத்தில் வெறும் ஆகாசத்திலிருந்துவாயு - தோன்றுகிறதா? அல்லது ஆகாசத்தைச் சரீரமாகக்கொண்ட பரமாத்மாவிடம் இருந்து தோன்றுகிறதா என்று சம்சயம். கேவலம் ப்ரக்ருதி முதலியவற்றிலிருந்து கார்யங்கள் தோன்றுகின்றன என்று பூர்வ பக்ஷம். ஆகாசாத்வாயு: - வாயோரக்னி: என்று கேவலம் ஆகாசாதிகளே காரணங்களென்று சொல்கையால் என்னும் பக்ஷத்தை உபந்யஸிக்கிருர்.

## தேஜோSதஸ்ததாஹ்யாஹ

அத: = கேவலவாயுவிலிருந்து தேஜ: = தேஜஸ் உண்டாகிறது. ததாஹ்யாஹ ச்ருதி அப்படித்தானே கூறுகிறது

## 223 (ஸூ) ஆப: (11)

அதஸ் ததாஹ்யாஹ என்று கூட்டிக்கொள்ளவேண்டும். - அத: இந்த கேவலம் தேஜஸ்ஸிலிருந்தே ஆப: ஜலம் - உண்டாகிறது. ததாஹ்யாஹ - ச்ருதி அப்படித்தானே கூறுகிறது.

## 224 (ஸூ) ப்ருதிவீ (12)

இவ்வாறே ப்ருதிவியும் கேவலம் அப்புக்களிலிருந்தே (ஜலத்திலிருந்தே) உண்டாகிறது என்று ச்ருதி கூறுகிறது. தா அன்னம் அஸ்ருஜந்த என்னுமிடத்திலே அன்னசப்தத்தாலே எப்படி ப்ருதிவீ கூறப்படுகிறதென்ருல்-

## 225 (ஸூ) அதிகார ரூபசப்தாந்தரேப்ய: (13)

'தா அன்ன மஸ்ருஜந்த' என்னுமிடத்தில் அன்னமென்று ப்ருதிவீ கூறப்படுகிறது. ஏனெனில், அதிகாரத்தால் - மஹாபூதங்களில் ஸ்ருஷ்டி-ப்ரகரணமாகையால் 2. ரூபாத்யத் க்ருஷ்ணம் ததந்நஸ்ய என்று மேல் வாக்யத்தாலே ப்ருதிவியின் க்ருஷ்ண ரூபத்தை அன்னத்துக்குச் சொல்வதாலும்; சப்தாந்தராச்ச - இந்த சாந்தோக்யத்திற்கு ஸமானப்ரகரணமான தைத்திரியத்திலே அத்ப்ய: ப்ருதிவீ, ஜலத்திலிருந்து ப்ருதிவீ உண்டாகிறது. என்று கூறும் வேறு சப்தத்தாலும் அன்னம் என்பது ப்ருதிவீயாகும்.

இந்த பூர்வ பக்ஷத்தை நிரஸனம் செய்கிருர்.

## 226 (ஸூ) ததபித்யாஞுதேவது தல்லிங்காத் ஸ: (14)

து சப்தம் பூர்வபக்ஷத்தை விலக்குவது. கேவலம் மஹத் அஹங்கார ஆகாச வாயு தேஜஸ் முதலியவை தம் கார்யங்களையுண்டாக்குபவையன்று-

ஆனால் *ஸர்வ* - மஹத் ஆதிகளைச் சரீரமாகக்கொண்ட பரமாத்மாவே அஹங்காராதிகளில் காரணம் - *தல்லிங்காத் - ததபி - த்யானுத்* - பரமாத்மாவே அஹங்காராதிகளின் காரணமென்பதற்கு லிங்கமான பரமாத்மாவின் அபித்யான ரூபமான சங்கல்பத்தால் - ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி, தத் தேஜோSஸ்ருஜத தத்தேஜஐக்ஷத - தா ஆப ஐக்ஷந்த - பலவாக ஆவோம் உத்பத்தி செய்வோம். இது முதலிய இடங்களிலே பஹுவான ஸங்கல்ப ரூபமான அபித்யானம் பரமாத்மலிங்கமென்று அல்லவா சொல்லப் படுகிறது. இங்கு தேஜஸ் முதலிய சொற்கள் தேஜஸ் முதலியவற்றைச் சரீரமாகக்கொண்ட பரப்ரஹ்ம பரங்களென்று நாமரூபவ்யாகரணச்ருதியாலே சித்தித்தது - கேவலமான அசேதனங்களுக்கு இத்தகைய ஸங்கல்பம் கூடா தென்று கருத்து.

## 227 (ஸூ) விபர்யயேண து க்ரமோSத உபபத்யதே (15)

'து' என்பது ஏவகாரப் பொருளது. விபர்யயேண க்ரமமும் இதனு லேயே பொருந்துகிறது. ஆகாசாத் வாயு: முதலியவற்றில் பரம்பரையாகக் கூறப்பட்ட ஸ்ருஷ்டிக்ரமத்தைவிட ஏதஸ்மாஜ் ஜாயதே ப்ராண: மனஸ் ஸர்வேந்த்ரியாணிச - முதலிய இடங்களில் சொன்ன ப்ரஹ்மத்திலிருந்தே எல்லாமுண்டாகிறது - என்கிற விபரீதக்ரமமும் அத ஏவ உபபத்யதே = அதையதைச் சரீரமாகக்கொண்ட பரமாத்மாவின் ஸங்கல்பத்தாலே ஸ்ருஷ்டி யென்று சொன்னால்தான் பொருந்தும்.

## 228 (ஸூ) அந்தரா விஜ்ஞான மனஸீ க்ரமேண தல்லிங்காதிதிசேந்நா விசேஷாத் (16)

விஜ்ஞான காரணங்களான இந்த்ரியங்கள் மனம் என்பவை ஏதஸ் மாஜ்ஜாயதேப்ராணோமன: ஸர்வேந்த்ரியாணிச - கம் வாயுர் ஜ்யோதிராப: ப்ருதிவீ முதலிய ச்ருதிகளிலே ஏதஸ்மாத் என்பது ப்ரஹ்மபரம் அன்று. தன்மாத்ரத்தைக் குறிப்பது. ஆகவே ஆகாசத்திற்கும் தன்மாத்திரம் ஐந்திற்கும் நடுவிலே இந்த்ரியங்களும்-மனஸ்ஸும் ப்ராணனும் க்ரமப்படி உண்டாகின்றன என்று இந்த க்ரமஸ்ருஷ்டி விவக்ஷிக்கப்பட்டது. *தல்லிங்காத்* - ப்ருதிவ்யப்ஸு ப்ரலீயதே என்று தொடங்கி வாயு: ஆகாசே ப்ரலீயதே - ஆகாசம் இந்த்ரியேஷு (ப்ரலீயதே) - இந்த்ரியாணி - தந்மாத்ரேஷு தந்மாத்ராணி பூதாதௌ ப்ர லீயந்தே என்று கூறிய ப்ரளயக்ரமத்தை நினைவுறுத்தும் லிங்கத்தால் அவ்வாறே தோன்றுகிறது. இதிசேந்ந - என்பது தவறு. அவிசேஷாத் - பூதங்களுக்கும் தன்மாத்ரங்களுக்கும் இடையில் விஜ்ஞானங்களும் மனமும் உண்டாகின்றன என்றாலும் தேஜஸ் முதலிய சொற்கள் அவற்றைச் சரீரமாகக் கொண்ட ப்ரஹ்மத்தையே குறிப்பவை என்றாற் போல இந்த்ரிய மனஸ்

ப்ராண சப்தங்களும் அவ்வவற்றைச் சரீரமாகக் கொண்ட ப்ரஹ்மத்தையே குறிப்பவையாதலின், அனைத்திற்கும் ப்ரஹ்மத்தினிடமிருந்தே ஸ்ருஷ்டி என்ற பொருள் முடிவதால் ஏதஸ்மாத் ஜாயதே ப்ராண: என்பதற்கும், ஏதஸ்மாத் ஜாயதே கம் என்பதற்கும் வேறுபாடு ஏதும் இல்லாமையாலே ப்ரஹ்மத்திடமிருந்தே சாக்ஷாத்தாக ஸர்வமுமுண்டாகின்றதென்பதற்கு இவ்வாக்யம் ப்ரமாணமாம்.

உலகில் தேஜஸ், அக்னி முதலிய சொற்களுக்கு ப்ரஹ்மமே பொருள் என்று கூறியது முக்கியமில்லாமல் கௌணமாகிவிடுமேயென்னும் சங்கையை அடுத்தபடி நீக்குகிறுர்.

## 229 (ஸூ) சராசரவ்யபாச்ரயஸ்து ஸ்யாத்தத்வ்யபதேசோ பாக்த: தத்பாவ பாவித்வாத் (17)

'து' என்பது சங்கையை விலக்குகிறது. சராசரவ்யபாச்ரய:-ஜங்கம ஸ்தாவர வஸ்துக்களைச் சொல்கிற, தத்வ்யபதேச: - அந்த ஜங்கமஸ்தாவர வாசகமான சொற்கள் ப்ரஹ்மணி அபாக்த: - ஜகத்தின் அந்தர்யாமியான ப்ரஹ்மத்தையே முக்கியமாகக் குறிப்பன. தத்பாவ பாவித்வாத்-ப்ரஹ்மத்தின் அனுப்ரவேசத்தால் நடப்பதால் இதனுல் தேஜஸ் முதலிய சப்தங்களும் ப்ரஹ்மபர்யந்தம் குறிப்பிடுவன என்பதற்கும் ப்ரஹ்மம் ஸர்வத்திற்கும் அந்தர்யாமீ என்பதே காரணமென்பதாகிறது. அனேன ஜீவேநாத்மனுனுப்ரவிச்ய நாம ரூபே வ்யாகரவாணி ததநுப்ரவிச்ய, ஸச்ச த்யச்சாபவத் என்னும் ச்ருதிகளில் லோகத்தில் புத்ராதிகளுக்கு நாம ரூபாதி வ்யாகரணம் செய்யும் பெற்ருேர்கள் போலன்றிக்கு செய்யப்படும் நாம ரூபங்கள் தன் வரையாகவேண்டும் என்று எம்பெருமான் அவற்றினுள் அந்த: ப்ரவேசம் செய்வதாலே ஸர்வ சப்தங்களும் அந்தர்யாமியான விசேஷ்யம் (ப்ரஹ்மம்) வரை போதிப்பவை - ஆகையால் ப்ரஹ்ம போதகத்வம் என்பது முக்கியமே என்று கருத்து.

### ஆத்மாதிகரணம்

## 230 (ஸூ) நாத்மாச்ருதே: நித்யத்வாச்ச தாப்ய: (18)

இப்படி அசேதனத்திற்கு ஸ்வரூப பரிணுமரூபமான ப்ரஹ்ம கார்யத்வத்தைக் கூறி, ஜீவனுக்கு அசேதனம்போல் அத்தகைய கார்யத்வம் இல்லாவிட்டாலும் ஸ்வபாவ அன்யதாபாவம் (மாற்றம்) என்னும் கார்யத்வம் கூடுமாதலின், ப்ரஹ்ம கார்யத்வம் பொருந்துவதை இவ்வதிகரணத்தில் ஸ்தாபிக்கிறுர் என்று ஸங்கதி.

ஆத்மா உத்பன்னமாகிறதா, இல்லையா என்று சம்சயம். உத்பன்ன-மாகிறது என்று பூர்வபக்ஷம். தே ா யே ன ஜீவான் விஸஸர்ஜபூம்யாம் ப்ரஜாபதி: ப் ர ஜா அஸ்ருஜத - முதலியச்ருதிகளில் ஜீவர்களுக்கு உத்பத்தி சொல்லப்பட்டிருப்பதால் என்றபடி ஆனால் நித்யோ நித்யானும் சேதனச் சேதனனும் என்று ஜீவன் நித்யனைவன் என்று கூறப்பட்டிருக்கிறதே-யென்றால், வாயுச் சாந்தரிக்ஷஞ்சைதத் அம்ருதம் என்பதுபோல் நீண்ட காலம் நிற்பதென்று கருத்தை கொண்டது எனலாம். ஆத்மாவுக்கு உத்பத்தி-யுண்டென்று ஒப்புக்கொள்ளாவிட்டால், ப்ரஹ்மகார்யத்வம் கூடாமையால் ஏகவிஜ்ஞானத்தால் ஸர்வவிஜ்ஞானம் வரும் என்று ப்ரதிஜ்ஞை பொருந்தா-தென்று கூறும் பக்ஷத்தை நிராகரிக்கிறார்.

*நாத்மா ச்ருதே:*- ஆத்மா உத்பத்தியுள்ளதன்று - ந ஜாயதே ம்ரியதேவா விபச்சித் - என்பது போன்ற ச்ருதிகளால் உத்பத்தியில்லையெனப்படுவதால் *நாப்யநி: த்யத்வாச்ச* - நித்யோ நித்யானும் முதலிய ச்ருதிகளிலே ஆத்மாவுக்கு நித்யத்வம் சொல்லப்படுவதாலும் என்றபடி, ஜீவர்களுக்கு ஸ் ரு ஷ் டி யை சொன்னது ஸுகதுக்கானுபவத்திற்கு ஏற்றபடி ஜ்ஞானத்திற்குச் சுருக்கமும் விரிவும் ஆகிய ஸ்வபாவ மாற்றம் என்னும் கார்யத்வத்தைக் கருத்திற் கொண்டதேயாகும். இத்தகைய வேறு அவஸ்தையைப் பெறலாகிற உத்பத்தி கூடுமாகையால், ஜீவனுக்கு ப்ரஹ்ம கார்யத்வம் தடையற்றதாதலின் ஏக விஜ்ஞானத்தால் ஸர்வ விஜ்ஞானமும் வரும் என்ற ப்ரதிஜ்ஞை தவறற்றதாகிறது. ஸ்ருஷ்டிக்கு முன்பு ப்ரஹ்மம் ஏகமே இருந்ததென்பது தேவர் முதலிய நாமரூப விபாகமற்ற ஸூக்ஷ்ம ஜீவ சரீரகமென்று கருதுவதாகும்.

இவ்விடம் முக்கியமானதொரு விஷயம். நம் சித்தாந்தத்தில் ஸர்வ த்ரவ்யங்களின் ஸ்வரூபம் நித்யமாயிருந்தாலும், அநித்யங்களான அவஸ்தா பேதங்களை இட்டு அநித்யமென்று கூறுகிறோம். இப்படி அநித்யங்களான மஹத்வாத்யவஸ்தாமூலமான த்ரவ்யயங்கள் அநித்யங்களானாலும் அவயவியை ஒப்புக்கொள்ளாமையால் ஸ்வரூபத: நித்யத்வம் ஸித்தமாயிற்று. அப்படியே த்ரவ்யங்களில் அடங்கிய ஆத்மாவுக்கும் ஸ்வரூபத: நித்யத்வம் சித்தமாயிற்றிருக்க - நாத்மா ச்ருதே: என்ற அதிகரணத்தால் மறுபடி ஆத்மாவுக்கு நித்யத்வத்தை ஏன் கூறுகிறார் எனில், இவ்விஷயத்தில் சிறிது வேறுபாடுள்ளது. ஆகாசாதி நிலையிலுள்ள த்ரிகுண அசித் த்ரவ்யத்திற்கு நாமாந்தர பஜன காரணமான அவஸ்தைகள் ஸ்வரூபத்தைச் சார்ந்தவை. அதுபோல, ஆத்மாவின் ஸ்வரூபமே நிர்விகாரமாதலின், ஜ்ஞான ஸங்கோச ரூபாவஸ்தையும், தேவத்வம் முதலிய அவஸ்தையும் ஆத்ம ஸ்வரூபத்தைச் சார்ந்தவையல்ல என்ற பேதத்தைக் காட்டவே, திரும்ப ஆத்மாவின்

நித்யத்வத்தை இங்கு கூறுகிருர். இதனுல், த்ரிகுணுத்மகத்ரவ்யம்போல் ஜீவனுக்கு ஸ்வரூப விகாரமில்லையென்று கூறியதாகிறது.

தேவாதிகளான அவஸ்தைகள் ஸ்வரூபத்தைச் சாராதவை. ஆனுல் ப்ரத்யக்த்வம், ஜ்ஞாத்ருத்வம் என்ற இரு தர்மங்களும் நித்யங்கள், ஸம்ஸார தசையில் பல சரீரங்களை எடுக்கையிலும் ஸ்வரூபத்தை விடுவதில்லை. இந்தப் ப்ரத்யக்த்வம் இரண்டுவிதம், தனக்கேதான் தோற்றுகை, பிறவற்றிற்குத்தான் தோற்றுகை - என்பனவாம். நான் நான் என்று தனக்கே தான் தோற்றுகை ஸ்வரூபத்தால் ஏற்படுவது. இதுதான் ஸ்வஸ்மை ஸ்வயம்பாஸமானத்வம் எனப்படும்.

நான் உறங்கினேன். நான் இத்தகையவன் என்று வேறு விசேஷங் களுடன் கூடித்தோன்றுகை பரத: ஸ்வஸ்மை பாஸமானத்வம், இது தர்ம-பூதஜ்ஞானத்தால் ஆவது. இவ்விரண்டும் ஸித்தாந்தத்திற்கு ஏற்றது. இவ் வபிப்ராயத்தாலேயே ஸூத்ரகாரர் மறுபடி ஆத்ம நித்யத்வத்தையருளிச் செய்தாரென்பதாம்.

ப்ரஸங்கத்தால் ஜீவனின் ஸ்வரூபத்தை நிரூபிக்கிருர். ஜீவன் சைதன்ய மாத்ர (ஜ்ஞானமாத்ர) ஸ்வரூபனு - அல்லது ஜட ஸ்வரூபனுய் இருந்து புதிதாக வந்த ஜ்ஞானத்தைப் பெற்றவனு? அல்லது ஜ்ஞாத்ருத்வத்தையே ஸ்வரூபமாகக் கொண்டவனு என்று சம்சயம். ஜ்ஞானமாத்ர ஸ்வரூபனென்று முதல் பக்ஷம். 'விஜ்ஞானம் யஜ்ஞம் தனுதே' என்று ஜ்ஞானஸ்வரூபன் என்கிறது. ஸுஷுப்திமூர்ச்சாதிகளில் ஆத்மாவுக்கு ஜ்ஞானம் தோன்ருமையால் சைதன்ய குணம் வரப்பெற்று கல் போன்றிருக்கிருன் என்பது இரண்டாம் பக்ஷம். இவ்விரண்டையும் நிரஸிக்கிருர்,

## ஜ்ஞாதிகரணம்

## 231 (ஸூ) ஜ்ஞோऽத ஏவ (19)

ஜீவன் - ஜ்ஞ - ஜ்ஞானுச்ரயனே - அத ஏவ - அதயோவேத இதம் ஜிக்ராணீதிஸ ஆத்மா, நபச்யோ ம்ருத்யும் பச்யதி என்பது போன்ற ச்ருதி-களால், பத்தன் முக்தனென்றும் இருவகை ஜீவனும் ஜ்ஞாதாவென்று கூறுவதாலே ஆத்மா ஜ்ஞாதாவே என்பது ஸித்தாந்தம். ஜ்ஞானமாத்ர-மென்று ச்ருதி கூறியது நித்யமான தர்மபூதஜ்ஞானம் ஆத்மாவுக்கு ஸ்வரூப நிருபக குணமாகையாலும், ஆத்மஸ்வரூபம் ஸ்வயம் ப்ரகாசமாகையாலும் என்றபடி. ஸுஷுப்த்யாதிகளிலே தர்ம பூதஜ்ஞானம் கர்மத்தாலே ஸங்குசித-மாயிருக்கிறது. ஆகவின் ஆத்மா ஜ்ஞாத்ருஸ்வரூபன் என்று தேறுகிறது.

ஜீவாத்மா விபு என்னும் வைசேஷிகனின் இரண்டாம் பக்ஷத்தை நிரஸிக்கிருர்.

## 232 (ஸூ) உத்க்ராந்தி கத்யாகதீநாம் (20)

ச்ருதே: என்று கூட்டிக்கொள்ளவேண்டும். உத்க்ராந்திக்குப் பின் கதி, ஆகமனம் பற்றிய ச்ருதி உள்ளமையால் என்றபடி, அணுஸ்வரூபோ ஜீவ: தேந ப்ரத்யோதேந ஏஷ ஆத்மா நிஷ்க்ராமதி என்று ஜீவனுக்கு தேஹத்திலிருந்து உத்க்ராந்தி (வெளியேற்றம்) ச்ருதியில் ப்ரஸித்தமானது ஆத்மா விபுவாளுல், இது எப்படிக் கூடும்? யேவை சாஸ்மாத் லோகாத் ப்ரயந்தி சந்த்ரமஸமேவ தே கச்சந்தி என்று தேஹத்திலிருந்து வெளிக்கிளம்பும் ஜீவன் ஸ்வர்க்கத்திற்குச் செல்லுசலும் புனரேதி அஸ்மை லோகாய கர்மணே என்று மறுபடி பூமியில் கர்மசேஷத்தை அனுபவிக்கைக்காக வருகிருனென்று வருகையும் கூறப்படுவதால் ஆத்மாவிற்கு விபுத்வம் பொருந்தாதாதலின் ஜீவன் அணுஸ்வரூபனே.

## 233 (ஸூ) ஸ்வாத்மநா சோத்தரயோ: (21)

'ச' என்பது ஏவகாரார்த்தம் உடையது. *உத்தரயோ:*- உத்க்ராந்திக்குப் பிந்தைய கதி, ஆகதி இரண்டிற்கும் *ஸ்வாத்மநாச* - ஸ்வரூபத்துடனேயே - ஆத்மஸ்வரூபமே பரலோகம் செல்கிறது. இந்த லோகத்திற்கும் வருகிறது. என்ற நிர்வாஹம் பொருந்தும். ஆத்மா விபுவென்ருல் சரீரத்தில் இருந்த ஆத்மாவிற்குச் சரீரத்திலிருந்து பிரிவுதான் உத்க்ராந்தி என்று சிரமப்பட்டு நிர்வகித்தாலும் - பின்னர்வரும் கமனுகமனங்கள் பொருந்தா என்பதாம்.

## 234 (ஸூ) நாணுரதத் ச்ருத்தேரிதிசேந்நேதராதிகாராத் (22)

ந. அணு: - ஜீவன் அணுவல்லன். அதத் ச்ருதே:-அணுத்வத்திற்கு எதிரான மஹத்வத்தைக்கூறும் ச்ருதியிருப்பதால். யோzயம் விஜ்ஞானமய: எனத்தொடங்கி, ஸவா ஏஷ மஹாநஜ ஆத்மா என்று ஜீவனுக்கு மஹத்வம் கூறுவதால் **இதிசேந்ந** என்பது தகாது. ***இதராதிகாராத்:***- இந்த வாக்யத்தில் ஜீவனுக்கு மஹத்வம் கூறவில்லை. பரமாத்மாவிற்கே மஹத்வம் கூறப்படுகிறது. ''யஸ்யானுவித்த: ப்ரதிபுத்த ஆத்மா'' என்று நடுவில் ஜீவனைக்காட்டிலும் இதரனை பரமாத்மாவைப் பற்றிப் பேசுவதால், ப்ரகரணம் முழுவதும் பரமாத்மாவைப் பற்றியதே. யஸ்ய பரமபுருஷஸ்ய அனுவித்த:- உபாஸக: ஆத்மா, ப்ரதிபுத்தோபவதி - ஸர்வஜ்ஞோபவதி என்று ச்ருதியின் பொருள்.

## 235 (ஸூ) ஸ்வசப்தோந் மாநுப்யாஞ்ச: (23)

''ஏஷோzணுராத்மா யஸ்மின் ப்ராண: பஞ்சதா ஸம்விவேச'' என்று ஸாக்ஷாத் அணுசப்தம் கூறப்படுவதாலும் உந்மானத்தாலும் - ஆரா என்ற

தான்யத்தின் நுனியளவு என்ற வாலாக்ரபாகத்தின் ப்ர்ஞ்யிரத்தில் ஒரு பங்கு ஜீவன் என்றும் சொல்வதால் ஜீவன் அணுவேயாவான்.

### 236 (ஸூ) அவிரோத: சந்தனவத் (24)

அணுவான ஜீவன் உடலின் ஏகதேசத்திலிருந்தாலும் உடல் முழுவது மான ஸுகதுக்கானுபவத்தில் விரோதமில்லை. *சந்தனவத்*=சந்தனத்துளி உடலின் ஒரு பகுதியில் பூசப்பட்டாலும் உடல் முழுவதுக்கும் பரவலாய் இன்பத்தைக் கொடுப்பது போலவே ஆத்மாவும் அனுபவிக்கலாம்.

### 237 (ஸூ) அவஸ்திதி வைசேஷ்யாதிதிசேந்ந அப்யுபகமாத் ஹ்ருதிஹி (25)

சந்தன பிந்து மார்பில் வைக்கப்படுவதால் இன்பம் பயக்கிறது. ஆத்மாவுக்கோ அவ்வாறு ஓர் இடமில்லை, என்பதால் எப்படி அவ்வனுபவங்கள் கூடும்? **இதிசேந்ந** - என்பது பொருந்தாது. = *அப்யுபகமாத்* = ஆத்மாவுக்கு தேஹத்தில் மார்பிலே சிறப்பாக இருப்பு ஏற்கப்பட்டிருக்கையால், உடல் முழுவதும் பரவும் இன்ப துன்பங்களின் அனுபவம் கூடும். இதயத்தில், யோZயம் விஜ்ஞானமய: ப்ராணேஷு ஹ்ருத்யந்தர் ஜ்யோதி: என்னும் ச்ருதியில் ஆத்மா ஹ்ருதயத்திலிருப்பதாக சொல்லப்படுகிறதல்லவா?

### 238 (ஸூ) குணாத்வாऽऽலோகவத் (26)

வாசப்தம் மதாந்தரத்தை விலக்குகிறது. *குணாத்* - அணுவான ஆத்மா தன் குணமாயும் விபுவாயும் உள்ள தர்ம பூதஜ்ஞானமூலம் எல்லா தேஹத்தையும் வ்யாபித்திருக்கிறது. *ஆலோகவத்* - ஓரிடத்திலுள்ள ஸூர்யன், தீபம் மணி முதலியவற்றின் ஒளி குணமாய் மிகுந்த ப்ரதேசத்தை வ்யாபித்திருப்பது போல், ஆத்மாவின் தர்மபூதஜ்ஞானமும் வ்யாபித்திருப்பதில் தடையில்லை. "விஜ்ஞானம் யஜ்ஞம் தநுதே" முதலிய ச்ருதிகளில் விஜ்ஞான ஸ்வரூபனாகப் பேசப்பட்ட ஆத்மாவுக்கு ஜ்ஞானம் குணம் என்பது எவ்வாறு என விளக்குகிறார்.

### 239 (ஸூ) வ்யதிரேகோ கந்தவத் ததாச தர்சயதி (27)

வ்யதிரேக: ஜ்ஞானஸ்வரூபனான ஆத்மாவைக்காட்டிலும் - குணமான தர்ம பூதஜ்ஞானத்திற்கு வேறுபாடு அவச்யம் ஏற்கத்தக்கது. கந்தவத்-கந்தமுடையது ப்ருதிவீ என்றால் ப்ருதிவியைக்காட்டிலும் அதன் குணமான கந்தத்திற்கு வேறுபாடு ஸித்தித்தாற்போல் தர்மபூத ஜ்ஞானத்திற்கும் ஸித்திக்கும்; ததாசதர்சயதி - ஜாநாத்யேவாயம் புருஷ: என்பது போன்ற ச்ருதிகளும் குணியாயும், குணமாயும் பிரித்துக்காட்டுகின்றன.

### 240 (ஸூ) ப்ருத்தகுபதேசாத் (28)

நவிஜ்ஞாதுர் விஜ்ஞாதேர் விபரிலோபோ வித்யதே என்று தர்மியான ஆத்மாவைவிட தர்மமான ஜ்ஞானத்தைத் தனிப்படுத்தி ஜ்ஞானம் நித்திய மென்று சொல்வது எப்படிக்கூடும் என்பதற்கு விடைதருகிருர்.

### 241 (ஸூ) தத்குணஸாரத்வாத்து தத்வ்யபதேச: ப்ராஞ்ஜவத் (29)

துசப்தம் சங்கையை விலக்க வல்லது. ***தத்குணசாரத்வாத்*** – அந்த ஜ்ஞான ரூபகுணத்தை ஸாரமாக ஸ்வரூப நிரூபகமாகக் கொண்டிருப்பதால், ***தத்வயபதேச:*** ஆத்மாவை ஜ்ஞானமென்று வ்யவஹரிப்பது - ***ப்ராஜ்ஞவத்*** ப்ரஹ்மணு விபச்சிதா என்று ப்ராஜ்ஞன் எனப்பட்ட பரமபுருஷன் ஸத்யம் ஜ்ஞானம் என்று ஜ்ஞான ஸ்வருபனுக வ்யவஹரிக்கப்படுகிருனே அப்படியே ஜீவனும் என்பதாம்.

### 242 (ஸூ) யாவதாத்ம பாவித்வாச்சநதோஷ: தத்தர்சனுத் (30)

ஜ்ஞானம் ஆத்மாவுக்கு ஸ்வரூபம் உள்ளளவும் நிற்பதாகையாலும் அந்த நித்யமான தர்மபூதஜ்ஞானத்தாலே அந்த ஆத்மாவைவ்யவஹரிப்பதில் குற்றம் ஒன்றுமில்லே; ***தத்தர்சனுத்***- கண்டமுண்டமான பசுவின் இனத்திற்கு பசுத்வம் என்ற தர்மம் அந்த ஸ்வரூபம் உள்ளளவும் நிற்பதாகையால், அந்த பசுத்வத்தினைக்குறிப்பதான பசு என்ற சொல்லால் கண்டாதிகளான இன மனைத்தையும் குறிப்பதால் இங்கும் விஜ்ஞானம் யஜ்ஞம் தனுதே என்று விஜ்ஞான சப்தத்தாலே ஆத்மாவைக்குறிப்பதில் தவறில்லே. சகாரத்தால் ஆத்மஸ்வரூபம் ஸ்வப்ரகாசமாகையாலும் ஜ்ஞானமென்று குறிப்பிடலாமென்று காட்டப்படுகிறது. ஆத்மாவுக்கு ஜ்ஞானம் நித்யமாகில் ஸுஷுப்தி முதலிய தசைகளில் ஏன் அது தோன்றவில்லே என்னும் சங்கையை மேலே பரிஹரிக்கிருர்.

### 243 (ஸூ) பும்ஸ்த்வாதிவத்வஸ்ய ஸதோZபிவ்யக்தியோகாத் (31)

து சப்தம் சங்கையை விலக்குவது. *அஸ்யஸத:* ஸுஷுப்த்யாதிகளிலும் மறைவாயுள்ள இந்தஜ்ஞானத்திற்கு விழிப்புநிலேயில் அபிவ்யக்தியோகாத் வெளியீடு உள்ளமையால், ஜ்ஞானம் ப்ரகாசிப்பதால் ஜ்ஞானம் ஆத்மாவுக்கு நித்யமான தர்மம். *பும்ஸ்தவாதிவத்:* சரீரத்தில் இருக்கும் ஆண்மைக்கான தாது பால்யத்தில் வெளிப்படாமலிருந்து யௌவனத்தில் வெளித்தோன்று வதுபோல் இங்கும் குறையில்லே. இவ்வாறு ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்-வத்தையும் அணுத்வத்தையும் சாதித்து விபுத்வம் கூறிவரும் குற்றத்தையும் எடுத்துக்காட்டுகிருர்.

(244) (ஸூ) நித்யோ பலப்த்யனுபலப்திப்ரஸங்கோ Sன்யதா நியமோவா Sந்யதா (32)

*அன்யதா* = ஆத்மா ஜ்ஞான மாத்ர ஸ்வரூபன் என்னும் பக்ஷத்திலும் ஆத்மா ஸர்வகதன் (விபு) என்ற பக்ஷத்திலும், நித்தியமாயும் உபலப்தியோ (புலப்படலோ) அனுபலப்தியோ (புலப்படாமையோ) ஏற்படும். *அதவா அந்யதரநியம:* அல்லது அவ்விரண்டில் ஒன்று எப்போதும் கட்டாயம் இருக்கவேண்டும். ஜ்ஞானமாத்ர ஸ்வரூபன் என்னும் பக்ஷத்தில் ஆத்மா புலப்படுகைக்கும் புலப்படாமைக்கும் ஆத்மஸ்வரூபமே காரணமாதலின், வேறு ஹேது இல்லாமையால் ஸ்வரூபம் நித்யமாதலின், இரண்டும் நித்யமாய் இருக்கும். ஆனால் புலப்படுகையும், படாமையும் ஒன்றோடொன்று முரண்பட்டவையாதலின், இரண்டிலொன்றிற்கே ஆத்மஸ்வரூபம் ஹேது என்று சொல்லில், இரண்டிலொன்று இருந்தே தீரவேண்டுமென்று நியமம் வந்து சேரும். ஆத்மா விபுவென்னும் பக்ஷத்திலும் ஜ்ஞானத்திற்கு ஹேதுவான ஆத்மமனஸ்ஸம்யோகங்கள், விபுக்கள் அனைவருக்கும் பொதுவாதலின் ஒரு ஆத்மாவுக்கு ஜ்ஞானமுண்டானால், எல்லோருக்கும் அது புலப்பட வேண்டியிருக்கும். ஒருவருக்குப் புலப்படவில்லையென்றால் எல்லோருக்கும் புலப்படாமலே போகவேண்டிவரும். ஆகையால், இந்த இரண்டு மதமும் சரியானவையல்ல என்பதாம்.



## கர்த்ரதிகரணம்

245 (ஸூ) கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்வாத் (33)

இப்படி ஆத்மாக்குக் கர்த்ருத்வத்தைச் சாதிக்கவல்ல ஜ்ஞாத்ருத்வத்தை நிருபித்து கர்த்ருத்வம் நிருபிக்கிறார் என்று ஸங்கதி. ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வம் போல் கர்த்ருத்வம் உண்டா இல்லையா என்று சம்சயம். ''அஹங்கார விமூடாத்மா கர்த்தா Sஹமிதி மன்யதே'' என்று சொல்வதால் ஆத்மா கர்த்தாவன்று; ப்ரதானமே கர்த்தா என்று பூர்வ பக்ஷம். இந்த ஸாங்க்யமதத்தை நிரஸிக்கிறார்.

ஆத்மாவே கர்த்தா ப்ரதானமன்று. ஏனெனில், சாஸ்த்ரார்த்தவத்வாத்' ஆத்மா கர்த்தாவானால்தான் யஜேத, உபாஸீத என்று யாக உபாஸநாதிகளை விதிக்கும் சாஸ்த்ரம் ப்ரயோஜனமுள்ளதாகும். சாஸனத்-சாஸ்த்ரம் என்றபடி, கர்த்தா செய்யவேண்டிய கர்மங்களை விதித்து தூண்டுகிறது. இதனால் ஜ்ஞாதாவையுத்தேசித்துத்தானே இதைச்செய், இதைச் செய்யாதே என்று விதி நிஷேதங்களைக் கூறுவது பொருந்துகிறது. அசேதநமான ப்ரதானம் கர்த்தாவானால் அவ்வாறு விதிப்பது பொருந்தாது. ஆதலின்,

கர்த்தாவான ஆத்மாவைக்குறித்தே சாஸ்த்ரம் போதிக்கிறது. ப்ரதானத்தை குறித்தன்று.

## 246 (ஸூ) உபாதாநாத் விஹாரோபதேசாச்ச (34)

"ஏவமேவைஷ ஏதான் ப்ராணன் க்ருஹீத்வா ஸ்வே சரீரே யதாகாமம் பரிவர்த்ததே" என்று ஆத்மா - ப்ராணனைக்ரஹித்தல் கூறப்படுவதாலும், யதாகாமம் பரிவர்த்ததே என்று சரீரத்திலே ஆத்மாவின் விஹாரத்தை உபதேசிப்பதாலும் ஆத்மாவே கர்த்தா - ப்ரதானமன்று.

## 247 (ஸூ) வ்யபதேசாச்ச க்ரியாயாம நசேந்நிர்தேச விபர்யய: (35)

***க்ரியாயாம் வ்யபதேசாச்ச கர்த்தா*** : "விஜ்ஞானம் யஜ்ஞம் தனுதே கர்மாணி தநுதேऽபிச" என்று வைதிக லௌகிக க்ரியைகளில் ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் சொல்லப்படுவதாலும் ***நசேத்*** : கர்த்தாவில்லை யெனில், விஜ்ஞானம் யஜ்ஞம் தனுதே என்னும் ச்ருதியில் விஜ்ஞானசப்தம் ஆத்மாவைச் சொல்லவில்லை. அந்தக்கரணமென்னும் பக்தியைச் சொல்லுகிறது என்றால். ***நிர்தேசவிபர்யய : ஸ்யாத்*** : = விஜ்ஞானே யஜ்ஞம் தனுதே என்று மூன்றும் வேற்றுமையுடன் நிர்த்தேசிக்கப்பட்டிருக்கும். க்ரியையில் புத்தி காரணமாதலால்,

## 248 (ஸூ) உபலப்திவதநியம: (36)

ப்ரதானத்துக்கே கர்த்ருத்வம், ஆத்மாவுக்குப் போக்த்ருத்வம் என்னும் பக்ஷத்தில் உபலப்திவத் அநியம: முன்பு சொன்ன உபலப்த்யநியம ப்ரஸங்கம் போல போக்த்ருத்வத்திற்கு அநியமமும் ப்ரஸங்கிக்கும். ப்ரதானம் ஸர்வ காரணமாதலால் போக்த்ருத்வமும் ஸர்வாத்மாக்களுக்கும் பொதுவாக ப்ரஸங்கிக்கும்.

## 249 (ஸூ) சக்தி விபர்யயாத் (37)

ப்ரக்ருதியே கர்த்தாவென்றால், கர்த்தாவுக்கே போக்த்ருத்வமும் யுக்தமாதலின், ப்ரக்ருதிக்கே போக்த்ருத்வ சக்தியும் ப்ரஸங்கிக்கும். ஆதலின், ஆத்மாவுக்கு போக்த்ருத்வ சக்தியின்மையை ஏற்கவேண்டி வரும்.

## 250 (ஸூ) ஸமாத்யபாவாச்ச (38)

ப்ரக்ருதிக்குக் கர்த்ருத்வத்தை அங்கீகரித்தால், மோக்ஷத்திற்குக் சாதனமான ஸமாதி இல்லாததாகிவிடும். ப்ரக்ருதியைவிட நான் வேறானவன் என்னும் ஸமாதியிலே (சித்தவ்ருத்தி நிரோதத்தில்) ப்ரக்ருதி கர்த்தாவாதல் பொருந்தாது ஆதலின், ப்ரதானம் கர்த்தாவன்று.

## 251 (ஸூ) யதாச தக்ஷோபயதா (39)

ஆத்மா கர்த்தாவென்றால் அவன் ஸுகாதி அனுபவங்களை இச்சிக்கையில் வைதிக லௌகிக கர்மங்களைச் செய்கிறான். இச்சியாதபோது செய்வதில்லை. என்று இருவிதமாகவும் வ்யவஸ்தை கூடும். *யதாச தக்ஷா* = தச்சன் விரும்பும் போது செயலாற்றுகிறான். விரும்பாதபோது செயலாற்றுவதில்லை. இப்படி இச்சாமூலமாகச் செய்தலும் செய்யாமையும் என்ற வ்யவஸ்தை கூடாதென்பது கருத்து.

### பராயத்தாதிகரணம்

## 252 (ஸூ) பராத்து தத்ச்ருதே: (40)

து சப்தம் சங்கையை விலக்குவது *பராத்:* பரமபுருஷ ஸங்கல்பத்தாலே தத் — கர்த்ருத்வம் ஏற்படுகிறது, *ச்ருதே:* அந்த: ப்ரவிஷ்டச்சாஸ்தா ஜநானாம் ஸர்வாத்மா ய ஆத்மானமந்தரோயமயதி என்று பரமாத்மாவிற்கு அதீநமான கர்த்ருத்வம் ச்ருதியில் கூறப்படுவதால்; இப்படி ஜீவன் பராதீனகர்த்தா என்றால், ஈச்வரனே எல்லாரையும் தூண்டுவதால், ப்ரயோஜக கர்த்தா ஆதலின், கர்மாவின் பலம் கர்த்தாவையே சாரும் என்பதால் அவனுக்கே விதி நிஷேத வாக்யங்களுக்கு வச்யத்வம் ஏற்படும் என்ற சங்கையை நிரஸிக்கிறார்.

## 253 (ஸூ) க்ருதப்ரயத்னாபேக்ஷஸ்து விஹிதப்ரதிஷித்தாவையர்த்யாதிப்ய: (41)

து சப்தம் சங்கையை விலக்குகிறது. முதல் ப்ரவ்ருத்தியிலே ஜீவன் செய்யும் ப்ரயத்னத்தை அபேக்ஷித்துப் பரமபுருஷன் ஜீவனை ப்ரவர்த்திப் பிக்கிறான். ஏனெனில், விஹிதப்ரதிஷித்த *அவையர்த்யாதிப்ய:* ஜீவனுக்கு முதல் ப்ரவ்ருத்தியில் ஸ்வதந்த்ரத்தன்மையை அங்கீகரிக்காவிட்டால், இதைச் செய் - செய்யாதேயென்னும் விதி நிஷேதசாஸ்த்ரங்களுக்கு வியர்த்தத் தன்மைவரும். ஜீவன் தண்டனைக்கோ - அனுக்ரஹத்திற்கோ ஆளாகாமல் போவான். அக்குறைகள் வராமைக்காக ஜீவனின் முதல் முயற்சியை எதிர் பார்த்தே பகவான் இவனைப் ப்ரவர்த்திப்பிக்கிறான். அந்த முதல் முயற்சியிலும் ஸ்வாதந்த்ர்யம் ஈஸ்வரனால் கொடுக்கப்பட்டது. அதுவும் முன் பின் கர்மாக்களின் பலமளிப்பதாகக் கருதப்படுகிறது,

ஆசார்யர் அருளிய முறையில் பாகுபாடு, இரக்கமின்மை இவற்றைப் பரிஹாரம் செய்யும் முறை கூறப்படுகிறது.

கர்த்ருத்வம் இருவகைப்படும். அவை ப்ரயோஜக கர்த்ருத்வம் — ப்ரயோஜ்ய கர்த்ருத்வம் என்பன. முதல் கர்த்ருத்வம், ஈச்வரனுக்கும்

இரண்டாவது ஜீவனுக்குமுரியது. இதனால், அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜனானும் ஸர்வாத்மா - ய ஆத்மானமந்தரோ யமயதி முதலிய ப்ரமாணங்களில் சொல்கிறபடி சுருக்கமின்றி எப்போதும் எவ்வகையான ப்ரவ்ருத்தி - நிவ்ருத்தி ரூபமான காரியங்களுக்குமான கர்த்ருத்வம் உண்டெனப்பட்டது. இந்நிலையில் ஜீவனின் தவறான ப்ரவ்ருத்திகளுக்கும், அதனால் ஏற்படும் துக்கானுபவத்திற்கும் காரணமாகையால் ஈச்வரனுக்கு வைஷம்யமும், நைர்க்ருண்யமும் ப்ரஸங்கிக்கும் என்றால் அவை வாரா. பலவகை முளைகளுக்கும் ஜலம் சாதாரண காரணமாவதுபோலேயும் முளைகளின் வேறுபாட்டிற்கு விதை வேறுபாடே காரணமாவதுபோலேயும் ஜீவனின் விஷமப்ரவ்ருத்திக்கும் துக்கானுபவத்திற்கும் அவன் கர்மமே காரணமாதலின் - ஜலம்போல் பொதுக் காரணமான ஈச்வரனிடம் அத்தோஷங்கள் ஒட்டுவதில்லை. தோஷங்கள் கர்மங்களால் ஏற்படுபவையே. "ஸமோஹம் ஸர்வ பூதேஷு" என்றான் அல்லவா? அதன்படி ஜீவனின் கர்ம பரம்பரையே காரணமாக ஈச்வரன் உயர்த்துவது தாழ்த்துவது (உந்நிநீஷா, அதோநிநீஷா) என்ற பாகுபாடு ஏற்படுகிறது என்பதால் குறையில்லை.

ஆமாம் - ஜீவனின், கர்மபரம்பரையே, இஷ்டத்திற்கும் கஷ்டத்திற்கும் காரணமென்றால், ஈச்வரனின் க்ருபைக்கு இடையில் என்ன காரியம்? என்றால் ஸகல காரியங்களும் கர்மாதீனமென்றாலும் சிறு வ்யாஜத்தை முன்னிட்டே ஏராளமான குறைகளையும் (அபராதங்களையும்) பொறுத்து முக்தி பர்யந்தமான ஐச்வர்யத்தைக் கொடுத்தல் க்ருபையின் கார்யமாதலால் க்ருபைக்கு விசேஷ பிரயோஜனமுண்டு. ஆனாலும் ஈச்வரனுக்கு ஜீவனைத் தண்டித்தல் குற்றமன்றோவென்றால், அது யாருக்கு தோஷம்? ஈச்வரன் ஸர்வ நியந்தாவாதலின், இது அவனுக்குத் தோஷமன்று. ஜீவனுக்குக் கஷ்டம் தருவதேயாயினும் ஈச்வரனுக்கு அது கேடல்ல; உலகில் துஷ்ட நிக்ரஹம் செய்து சிஷ்ட பரிபாலனம் செய்யும் மஹாராஜாவைப் புகழ்வதைப்போலவே க்ருபை மிக்க ஈச்வரனை தங்கள் தோஷங்களை நீக்குவதற்காக ஆச்ரயிப்பதில் தடையேதுமில்லை. ஆகையால், அனுக்ரஹம் நிக்ரஹம் இரண்டிற்கும் விஷயம் வெவ்வேறாதலால் தோஷமில்லை. இதேபோல், பகவானுக்குரிய உதாஸீனத்வம் (நடுநிலைமை) ப்ரேரகத்வம் (தூண்டும் நிலைமை) ஸாக்ஷித்வம் அனுமந்த்ருத்வம் (அனுமதித்தல்) முதலிய தர்மங்கள், ஒன்றோடொன்று முரணாகத் தோன்றினாலும் இவை லக்ஷணத்தால் பொருத்தமானவையாதலின், விரோதமில்லை. ரக்ஷணம் ஏதோ ஒரு காலத்ததாதலின், க்ருபையும் ஏதோ ஒரு கால விசேஷத்ததேயென்று சங்கிக்கவேண்டாம். கருணை நித்யை, அநித்யை என இருவகைப்படும். எல்லா ஜீவன்களின் ஸ்வரூபம், ஸ்திதி முதலியவற்றைக் காக்கும் க்ருபை நித்யை, அவரவர் அறியாமலே செய்யும் ஸுக்ருதாதி மூலகமான கர்மாக்களுக்கு உசிதமான விசேஷ பலன்

களைக் கொடுக்கும் க்ருபை அநித்யை, ஆதலின், ஸர்வ விஷயத்திலும், ஸகல பல ப்ரதான ஸங்கல்ப ரூபமான ஸாமான்ய க்ருபையே நித்யமும் நிர்ஹேது கமும் ஆகும். விசேஷ பலப்ரதான ஸங்கல்ப ரூபமான அநித்ய க்ருபையே ஸ்ஹேதுகமென்கிறது. இதனுல் நித்ய க்ருபாவத்வம் சித்திக்கிறது.

முன்கூறிய கர்த்ருத்வாதி தர்மங்களுக்கு எப்படி முரண்பாடில்லை யென்ருல் - கூறுவோம்.

1. ஈச்வரன் ஸ்வதந்த்ரனுன்படியால் கர்த்ருத்வம்
2. ப்ரயோஜ்ய கர்த்தாவான ஜீவன் மூலமே செய்விப்பதால் ப்ரேர கத்வம்.
3. ப்ரவ்ருத்தனுன சேதனனை மேன்மேலும் செய்யத் தூண்டுவதால் அநுமந்த்ருத்வம்
4. முளைகளுக்கு ஜலம்போல் சர்வத்திற்கும் பொதுக் காரணமாதலின் உதாஸீனத்வம்.
5. எப்போதும் எல்லாவற்றையும் காண்கையாலே ஸாக்ஷித்வம்.
6. அவனவன் கர்மத்திற்கேற்றவாறு ஸர்வத்தையும் செய்வதால் ஸஹகாரித்வம்.
7. ஸர்வ ஸ்வாமியாய் ஆச்ரிதரக்ஷண பலத்தைத்தான் ஏற்பதாலும் பலித்வம்.
8. பலமத உபபத்தே: " என்றபடி ஸர்வ கர்ம பல ப்ரதத்வம், "

என்ற இவையனைத்தும் ஏதோ ஒரு சமயத்திலென்றில்லாது ஸர்வ காலத்திலுமிருப்பதால் ஒன்றுக்கொன்று விரோதமில்லை.

இங்கு ஓர் பூர்வபக்ஷம். ஜீவனின் முதல் பிரவ்ருத்தி ஈச்வரனின் தூண்டு தலின்றியே நடக்கிறது. அப்பிரவ்ருத்தியில் ஜீவன் பகவானையபேக்ஷிக் காமலே கர்த்தாவாகிருன். அப்படியில்லையெனில், கர்த்தாவே போக்தா வாதலின், ஜீவனிடம் பகவானின் நிக்ரஹம் பிறக்க வழியில்லை. ஈச்வரனுக்கே கர்மபல போக்த்ருத்வம் ப்ரஸங்கிக்கும் என்கின்றனர். இந்த வினு மற்றவர் பக்கத்திலும் சமமே. முதல் ப்ரவ்ருத்தியில் நிரபேக்ஷ கர்த்ருத்வமிருந்தாலும் இரண்டாம் ப்ரவ்ருத்தியில் ஈச்வரன் அநுமந்தா என்று அவர்கள் சொல்வதால் நிர்த்தயத்வம் வரலாம். கிணற்றில் குதிக்கத் தொடங்கும் சிறுவனை இரக்கம் மிக்க பெரியோர்கள் தடுத்து நிறுத்துவதைக் காண்கிருேம். அவ்வாறின்றி தவருகப் ப்ரவர்த்திப்பவனை ஈச்வரன் தடுக்காமல் அநுமதிப்பது தயவற்ற தன்மையையே காட்டும். ஸர்வ நியந்தா என்னும் ச்ருதியை இத்தகையோர்

விஷயத்தில் விலக்கி (சுருக்கி)க் கொள்ள வேண்டியிருப்பதாலும், முதல் ப்ரவ்ருத்தியில் ஈச்வரன் உபேக்ஷித்திருக்கிருனென்பது பொருந்தாது. மேலும் கல்ப காலத்தின் ஆதியில் ஜீவனின் முதல் ப்ரவ்ருத்தி ஈச்வரனை அபேக்ஷிக்காதது என்கிறீர். அத்தகைய விஷமமான ப்ரவ்ருத்தி ஜ்ஞானத்தையே ஆகாரமாகக் கொண்ட ஜீவஸ்வரூபத்தால் ஏற்பட்டதன்று.

பின்னென்னெனில், பூர்வ கல்பத்தில் செய்யப்பட்ட அவரவர்களுடைய பாப கர்மாவைக் காரணமாகக் கொண்டதெனல் வேண்டும். இதனுல் ஸம்ஸாரம் அநாதியாதலின், ஜீவனின், ப்ரவ்ருத்தி முதலாவது என்பது பொருந்தாது. ப்ரவ்ருத்தியோ கர்மாதீனயானதென்ருல், அதில் ஈச்வரனுக்கு என்ன இடம் என்னும் - இப்பூர்வ பக்ஷத்திற்கு விடை.

கர்மமே ஈச்வர ஸங்கல்ப ரூபம். ஆகையால், ப்ரவ்ருத்தியும் அந்த ஸங்கல்பாதீனை என்று பலிக்கிறது. முதல் ப்ரவ்ருத்தி, ஈச்வராதீனையன்றென்பவராலும் ஓரளவிற்கு ஈச்வராதீனத்வம் ஏற்கப்பட்டிருப்பதால், எல்லா ப்ரவ்ருத்திகளும் அவன் அதீனமானவையே என்றதாகிறது. இப்படியாகில் ஸ்ரீ பாஷ்யத்தில் தத்ர உபேக்ஷ்ய, ததோZனுமத்ய என்பது முதலியவை முதல் க்ஷணத்தில், உபேக்ஷிக்கிருன் என்றும், இரண்டாம் க்ஷணத்தில் அனுமதிக்கிருன் என்றும் எப்படிக் கூறலாம்? என்ருல், முதலில் என்பது ஸ்ருஷ்டி காலத்தைக் குறிப்பது. கர்மாவைப்போல் வைஷம்ய காரணமின்றி - ஜலம்போல் ஸாமான்ய காரணமாகிருன் என்ற கருத்தால் உபேக்ஷிக்கிருனென்றதே தவிர, அக்காலத்தில் ஈச்வரன் ப்ரேரகனல்லன் என்ற கருத்தில்லை. அப்படியானுல், அவனுக்கு கர்த்ருத்வ, காரயித்ருத்வ-உபேக்ஷகத்வாதிகள் எப்போதுமிருப்பது விருத்தமன்ருேவென்னில், கீழ்ச் சொன்னவாறு கர்த்ருத்வாதி ஸர்வ லக்ஷணமும் பொருந்துவனவாதலின், ஒரே பொருளில் த்ரவ்யத்வம், ப்ருதிவீத்வம். கடத்வம், முதலியவற்றிற்கு விரோதமில்லாமை போன்றே இங்கும் விரோதமில்லை. ஆகையால், ஜீவனுடைய கர்மத்தை அபேக்ஷித்து ஸ்ருஷ்ட்யாதிகளைச் செய்வதால் ஈச்வரனுக்கு வைஷம்யமும் நைர்க்ருண்யமும் கிடையாதென்பது கருத்து.

## அம்சாதிகரணம்

## 254 (௬௭) அம்சோ நாநாவ்யபதேசாத் அன்யதாசாபி வ்யபதேசாத் தாசகிதவாதித்வமதீயதஏகே (42)

இப்படி ஜீவனுக்கு கர்த்ருத்வம் பராதீனமாகில், அப்போது ராஜப்ருத்ய ந்யாயத்தாலே பரமாத்மாவின் அம்சம் என்பது உபசார வழக்காகலாம் என்ற சங்கையை இவ்வதிகரணத்தில் பரிஹரிக்கிருர்.

ஜீவன் பரமாத்மாவை விட மிக வேறுபட்டவனு அல்லது அஜ்ஞனான பரமாத்மாவா? அல்லது உபாதி ஸம்பந்தம் பெற்ற பரமாத்மாவா அல்லது பரமாத்மாவின் அம்சமானவனு ? என்று நால்வகைச் சம்சயங்கள்.

1. மிகவும் வேறுபட்டவன் என்பது வைசேஷிகன் மதம். ''ப்ருதகாத்மானம் ப்ரேரிதாரஞ்சமத்வா'' என்ற ச்ருதிவாக்யம் அவர்களுக்குத் துணை நிற்கிறது. இப்படி பேதபக்ஷத்தில் அரசனே உலகம் முழுவதும் என்பது போல அபேத ச்ருதிகளை உபசாரச் சொற்களாகக் கொள்ளவேண்டும்.

2. அஜ்ஞனான ப்ரஹ்மமே ஜீவனுகிறது என்பது சங்கரர் பக்ஷம். தத்த்வமஸி, அயமாத்மா ப்ரஹ்ம - முதலிய அபேதச்ருதிகள் இதற்கு ப்ரமாணங்கள். இப்பக்ஷத்தில் பேதச்ருதிக்கு அஜ்ஞான க்ருதமான பேதம் விஷயம்.

3. உபாதியுடன் ஸம்பந்தமுள்ள ப்ரஹ்மமே ஜீவபாவத்தையடைகிறது என்பது யாதவபாஸ்கரபக்ஷம். இதற்கு அபேதச்ருதி முக்யத்வமே காரணம். இம்மூன்று பக்ஷங்களையும் நிரஸிக்கிருர்.

அம்சோ நாநாவ்யபதேசாத் ... ... ... ... ... ஏகே.

ஜீவன், **அம்ச :** - பரமாத்மாவின் சரீரமாயிருந்து கொண்டே விசேஷணமாயிருப்பதால் அம்சம் (பகுதி) ஆகிருன். ***நாநாவ்யபதேசாத் அன்யதா சாபிவ்யபதேசாத்*** - ப்ருதகாத்மானம் முதலிய ச்ருதியால் பேதம் கூறப்படுவதாலும் - தத்த்வமஸி என்பது முதலிய வேறுபட்ட வ்யபதேசத்தாலும், இவ்வாறு அபேத ச்ருதி பேத ச்ருதிகட்கு முக்கியமாக அர்த்தம் ஸித்திக்க - சித் அசித் விசிஷ்டமான ப்ரஹ்மம் என்ற ஒரே வஸ்துவில் பரமாத்மாவில் விசேஷணமான ஜீவன் அம்ச பூதன் என்று கொள்ள-வேண்டும். பேதச்ருதிகள் விசேஷணமான ஜீவனுக்கும் விசேஷ்யமான ப்ரஹ்மத்திற்கும், ஸ்வரூபத்திலும் ஸ்வபாவத்திலும் பேதத்தைக் காட்டுகின்றன. தத்த்வமஸி அயமாத்மா ப்ரஹ்ம முதலிய அபேதச்ருதிகள், ஜீவசரீரகனான பரமாத்மா ஒருவன் என்று சொல்லுகின்றன. இந்த இரு ச்ருதிகளும் முக்கியார்த்தங்கள். அஜ்ஞமான ப்ரஹ்மமே ஜீவன் என்கிற வாதத்திலும் - உபாதி கூடிய ப்ரஹ்மம் ஜீவன் என்ற வாதத்திலும் பரமாத்மாவுக்கு ஸர்வஜ்ஞத்வம், நிர்த்தோஷத்வம் முதலியவற்றைக் கூறும் ச்ருதிகள் விரோதிக்கும்: ***தாச கிதவாதித்வம் அதீயதே ஏகே*** - சில ச்ருதிகள் ப்ரஹ்ம தாசா: ப்ரஹ்ம தாஸா: ப்ரஹ்மேமே கிதவாஉத முதலிய வாக்யங்களால்-ப்ரஹ்மம் ஸர்வ ஜீவாந்தர்யாமியாயிருக்கையால் வேடர்கள், கிதவர்கள், தாஸர்கள், இன்னமும் ஸர்வ ஜீவ ஸமூஹமும் ப்ரஹ்மாத்ம

## 264 (ஸூ) ப்ரதேசபேதாதிதி சேந்நாந்தர்பாவாத் [52]

ப்ரஹ்மம் அச்சேத்யமானாலும் உபாதி ஸம்யுக்த ப்ரதேசமும், உபாதி ஸம்பந்தமற்ற ப்ரதேசமும் என இரண்டுமுள்ளன. ஆகையால், போக வ்யவஸ்தை பொருந்தும். இதிசேந் - என்பது பொருந்தாது. அந்தர்ப்பாவாத் விபுவான ப்ரஹ்மம் சலியாது. அணுக்களான உபாதிகளே சலிக்கும். அப்போது ஸர்வ ப்ரஹ்ம ப்ரதேசமும் உபாதியின் ஸ்பர்சத்திலே உள்ளடங்கி விடுவதால் கூறிய குற்றங்கள் அதே நிலையில் உள்ளன. ஆகையால் மற்றவை யாவும் அஸமஞ்ஜஸங்கள் - ஸ்ரீ பாஷ்யகாரரின் சித்தாந்தமே முழுவதும் ஸமஞ்ஜஸம்.

## இப்பாதத்திலுள்ள ஏழு அதிகரணங்களில் ஸாரம்

1. வியததிகரணத்தில் ஆகாசத்திற்குக் க்லுப்தியும் உத்பத்தியும் பேசப்பட்டன.

2. தேஜோதிகரணத்தில் க்ரமமாகத் தோன்றும் மஹதாதி கார்யங்களுக்கு முந்தைய தத்வ விசிஷ்டனான பரமாத்மாவிடமிருந்தே உத்பத்தியும்.

3. ஆத்மாதிகரணத்தில் நித்யனான ஜீவனுக்கு உத்பத்தி லயங்கள் தேகச் சேர்க்கையையும் தேஹ வியோகத்தையும் அடிப்படையாகக் கொண்டமையும்.

4. ஜ்ஞாதிகரணத்தில் ஜீவனுக்கு ஜ்ஞானகனத்வமும் (ஜ்ஞாத்ருவமும்)

5. கர்த்ரதிகரணத்தில் ஜீவனுக்கு கர்த்ருத்வமும்.

6. பராயத்தாதிகரணத்தில் அவனுக்குக் கர்த்ருத்வம் பகவததீனம் என்றும்.

7. அம்சாதிகரணத்தில் குணங்களும் - தேஹங்களும் குடம், ஜீவன் போன்றவர்களுக்கு அம்சமாயிருப்பதுபோல இந்த ப்ரஹ்மத்துக்கும் சத்சித் ரூபமான ஜகத்துக்கு அம்சமானது என்னும் ஆக ஏழு அர்த்தங்கள் ச்ருதிகளில் பரஸ்பர விரோதத்தைப் பரிஹரிக்கும் இந்த வியத் பாதத்திலே சாதிக்கப்பட்டன.

மூன்றும்பாதம் முற்றிற்று.

## இரண்டாம் அத்யாயம்—நான்காம் பாதம்

### ப்ராணோத்பத்யதி கரணம் (1)

ஜகத்து முழுவதும் ப்ரஹ்மத்தின் கார்யம் என்பதைச் சமர்த்திக்க, சிலச்ருதிகளில் மேலெழுந்தவாரியாக இந்த்ரியங்கள் நித்யங்கள் என்னும் எண்ணம் சில மந்தர்களுக்குத் தோன்ற இடமிருப்பதால் அவ்வெண்ணத்தை நீக்க -ஜீவனின் உபகரணமான இந்த்ரியங்களுக்குக் கார்யத்வத்தை சாதிக்கிருர் என்று ஸங்கதி.

இந்த்ரியங்கள் ஜீவன்போல் உண்டாவதில்லையா? ஆகாசாதிகள் போல் உண்டாகின்றனவா என்று சம்சயம். உண்டாவதில்லையென பூர்வபக்ஷம். அஸத்வா இதமக்ர ஆஸீத், ததாஹு: கிம் ததாஸீத் இதி. ருஷயோவாவதே அக்ரே ஆஸீத் ததாஹு: கேதே ருஷய: இதி, ப்ராணாவாவ ருஷய: இதி ப்ரளய காலத்தில் ப்ராண சப்த வாச்யங்களான இந்த்ரியங்களுக்கு இருப்பு கூறுவதால் உற்பத்தியில்லையென்பதாம்.

### 265 (ஸூ) பூர்வபக்ஷ ஸூத்ரம் :- ததா ப்ராணா: (1)

ஜீவன் எவ்வாறு உற்பத்தியும் மரணமுமில்லாதவன் (நஜாயதே ம்ரியதே வாவிபச்சித்) எனப்படுகிருனே அப்படியே *ப்ராணா:* - இந்த்ரியங்களும், அஸத்வா என்னும் ச்ருதிகளாலே உற்பத்தியாவதில்லை எனப் பூர்வபக்ஷம். அதைக் கண்டிக்கிருர்.

### 266 (ஸூ) கௌண்யஸம்பவாத் தத் ச்ருதேச்ச (2)

'ச' என்பது து என்ற பொருளதாய் பூர்வ பக்ஷத்தை நிரஸிக்கிறது. இந்திரியங்களும் வியதாதிகளைப்போலே உத்பன்னங்களே. ***தத்ப்ராக் ச்ருதேச்ச*** - அந்த பரமாத்மாவிற்கே ப்ரளயகாலத்தில் இருப்பு ச்ருதியில் கூறப்படுவதால் ஸதேவஸோம்யேதம் அக்ர ஆஸீத் இத்யாதிச்ருதிகளில் (ஏகோஹவை நாராயண ஆஸீத்) ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே ப்ரளய ஸமயத்தில்-இருக்கிருன் என்பது ப்ரஸித்தம். ப்ராண சப்தமும், ப்ராணமபிஸம்விசந்தி என்ற ச்ருதியாலே பரமாத்மாவைக் குறிப்பது, எல்லாவற்றையும் ஸாக்ஷாத்-கரிக்கவல்ல ரிஷி என்ற தன்மையும் அவனுக்கே கூடும். இப்படியாகில் ப்ராணாவாவரிஷய: என்ற பஹுவசனம் (பன்மை) *கௌணீ*-உபசார வார்த்தை ஏனெனில், *அஸம்பவாத்* - இந்த்ரியங்கள் ப்ரளய காலத்தில் இல்லாமையால்.

### 267 (ஸூ) தத்பூர்வகத்வாத்வாச: (3)

*வாச:* பரமாத்மேதரமான எல்லா நாமதேயங்களும், ***தத்பூர்வகத்வாத்*** அந்தந்த வஸ்துவின் ஸ்ருஷ்டியை முன்னதாகக் கொண்டிருப்பதால்

தத்தேதந்தர்ஹி அவ்யாக்ருத மாஸீத் - தந்நாம ரூபாப்யாம் வ்யாக்ரியத என்கிற ச்ருதி அந்த வஸ்துக்களேயும் நாமங்களேயும் ப்ரஹ்மமே படைத்தது என்று சொல்வதால் இந்த்ரியாதி ஸ்ருஷ்டிக்கும் முன் உள்ள ப்ராணன் என்பது பரமாத்மாவேயென்று சித்திக்கிறது.

## 268 (ஸூ) ஸப்தகதேர் விசேஷிதத்வாச்ச (4)

இதில் இந்த்ரியங்களின் எண்ணிக்கையைக் காட்டுகிறுர். என்று ஸங்கதி. இந்த்ரியங்கள் ஏழா பதினென்ரு என சம்சயம். ஏழே என்று பூர்வபக்ஷம். ஏனெனில்: **கதே:** ஸப்தப்ராணு ப்ரபவந்தி என்று ஜீவனுடனே சேர்ந்து கதி சொல்வதால், விசேஷிதத்வாச்ச - யதா பஞ்சாவதிஷ்டந்தே ஜ்ஞானனி மனஸாஸஹ - புத்திச்ச நவிசேஷ்டேத தமாஹு: பரமாம் கதிம் என்று ஏழு விஜ்ஞானங்களும் ஸ்திரமாயிருந்தால் யோகம் ஸித்திக்கும் என்று விசேஷித்து ஜ்ஞானனி என்று ஜ்ஞானஸாதனங்களான இந்த்ரியங்களே விசேஷிக்கையாலும் ச்ரோத்ரம் த்வக் சக்ஷுஸ் ஜிஹ்வா க்ராணம், மனஸ் புத்தி என்று ஏழு இந்த்ரியங்கள் - வேறு இல்லை என்று பூர்வபக்ஷம்.

## 269 (ஸூ) ஹஸ்தாதயஸ்து ஸ்திதேதோ நைவம் (5)

அவ்வாறல்ல; இந்த்ரியங்கள் ஏழு என்பது சரியல்ல. ச்ரோத்ரம், (செவி), முதலிய ஜ்ஞானேந்த்ரியங்கள் ஐந்து, மனம் ஒன்று, ஆகப் பதினேரிந்த்ரியங்கள். அவற்றுள் ஐந்து ஜ்ஞானேந்த்ரியங்களும் ஜீவனுடன் வேறு சரீரத்தில் கூட இணைந்தே செல்கின்றன. **ஹஸ்தாதயஸ்து** கர்மேந்த்ரியங்களோவெனில், *ஸ்திதே* உடல் உள்ளவரை உள்ளன. சரீரம் தோன்றும்போது தோன்றி, மறையும்போது மறைபவை. **அதோ நைவம்** ஆகையால், இந்த்ரியங்கள் ஏழு என்பதில்லை. புத்தி அஹங்காரம் சித்தம், என்ற வழக்குகளும் மனேவ்ருத்தியின் பேதங்களேயாதலின், வேறல்ல. ஆகவே இந்த்ரியங்கள் பதினென்றேயாம். இவ்வித வ்யாக்யானம் தீபத்தைத் தழுவியது.

### இங்கோர் பூர்வபக்ஷம்

இங்கு ஸ்ரீபாஷ்யத்தில், ஜீவனிருக்கையில் ஹஸ்தாதிகள் அவனுக்கு உபகாரகமாயிருப்பதாலும், எடுப்பது, வைப்பது போன்ற செயல் ஆற்றுவ-தாலும் இந்த்ரியத்வத்தில் தடையில்லை. ஆகையால், அவை ஏழுதானென்று கூறப்படவில்லை. அவை பதினென்றே. ஜீவன் சரீரத்தையடையும் போது கர்மேந்த்ரியங்கள் உண்டாகி சரீரம் நசிக்கும்போது அடியோடு நசிக்கின்றன. ஜீவன் லோகாந்தரம் - தேஹாந்தரத்தையடையும்போது ஜ்ஞானேந்த்ரியங்-களே உடன் போகின்றன. கர்மேந்திரியங்கள் போவதில்லை என்று இவ்-வர்த்தங்களைச் சாதிக்கவில்லை.

ச்ருதப்ரகாசிகையிலோ - பதினொரு இந்த்ரியங்களுமே அஹங்காரத்தி லிருந்து தோன்றியவையாதலின், ஜீவனின் லோகாந்தர தேஹாந்தர கமனத்திலும் இவை கூடவே செல்லுகின்றனவென்றும் ப்ரளய தசையைத் தவிர மற்ற காலங்களில் இவற்றிற்குப் பிரிவே கிடையாதென்றும் கூறி "ஏழே இந்த்ரியங்கள்" என்பதைக் கண்டித்திருக்கிறார். சிந்தாமணியிலும், ஸப்த இமேலோகா யேஷு சரந்திப்ராணா: என்கிற ச்ருதியில் ஜீவனுடன் செல்லல் ஜ்ஞானேந்த்ரியத்திற்கு மட்டும் கூறினாலும் கர்மேந்த்ரியத்துக்கும் உபலக்ஷணம் என்று அருளப்பட்டுள்ளது. இப்படியிருக்க, தீபானுஸாரியாக வ்யாக்யானம் செய்யலாமோ என்பது பூர்வபக்ஷம். இவ்விஷயத்தில் 'ந்யாய பரிசுத்தி' என்ற க்ரந்தம் சமாதானமாக அருளும் வழியைக் காண்போம் - யாதவப்ரகாசர் மதத்தினர்போல் கர்மேந்த்ரியங்கட்கு ஒவ்வோர் சரீரத்திலும் உத்பத்தி விநாசங்களை ஏற்றுக்கொண்டாலும், அவற்றிற்கு இந்த்ரியத்வம் ஸித்தமாகிறது என்பதால், இந்த ஸூத்ரத்திற்குப் பொருத்தமான பொருள் ஒன்று கூறப்பட்டது. ஆதலின், பதினொரு இந்த்ரியங்களும் வேறு சரீரங்களிலும் தொடர்கின்றன என்பது ஸ்ரீ பாஷ்யகாரர் திருவுள்ளம் என உணர்கிறோம். "சரீரேஸ்திதே" என்றும், ப்ரயோஜனாந்தரத்தாலும் பிறர் மதத்தை யனுவதித்து, இந்த்ரியங்கள் பதினொன்றுதான் என ஸ்தாபிப்பதாலும், தீபத்தில் சொல்லியதற்கும் விரோதமில்லையென்பதாம்.

## ப்ராணுணுத்வாதிகரணம்

### 270 (ஸூ) அணவச்ச (6)

இந்த்ரிய பரிமாணம் இதனால் கூறப்படுகிறது. இந்த்ரியங்கள் ஸர்வ கதங்களா, அணுக்களா என்று சம்சயம். ஸர்வகதங்களே - ஏதே ஸர்வ ஏவஸ மாஸ்ஸர்வே அனந்தா என்பதனால் அநந்தத்வம் சொல்வதால் என்று பூர்வ பக்ஷம். அதை நிரஸிக்கிறார், "அணவச்ச" என்று இந்த்ரியங்கள் அணுக் களே: ப்ராணமனூத்க்ராமந்தம் ஸர்வே ப்ராணா அனூத்க்ராமந்தி என்று இந்த்ரியங்கள் ஜீவனுடன் செல்வதாகக் கூறப்பட்டிருப்பதால், அனந்தம் என்று சொன்னதோ, "அதஹைதா நநந்தாநுபாஸ்தே" என்று இந்த்ரியங்களின் உபாஸனத்தால் ஏற்படும் பலன்களின் மிகுதியைக் காட்டவேயாம்.

### 271 (ஸூ) ச்ரேஷ்டச்ச (7)

இந்த்ரியங்களுக்கு நிர்வாஹகம் ஆகையாலே ச்ரேஷ்டமான ப்ராண-வாயுவும் உண்டாகிறது. ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராண: மன: என்று சொல் வதாலே இங்கு ப்ராணனைச் சொன்னது மேலே ப்ராணனின் ஸ்வரூபத்தை விசாரிக்கவாம்.

## வாயுக்ரியாதிகரணம்

### 272 (ஸூ) நவாயுக்ரியே ப்ருதகுபதேசாத் [8]

இந்த ச்ரேஷ்ட ப்ராணன் கேவல வாயு ஸ்வரூபமா? அல்லது அந்த வாயுவின் சலனதிக்ரியையா? அல்லது தேஹாதிதாரணத்துக்கு அனுகுண மான ஓர் அவஸ்தாவிசேஷத்தோடுகூடின வாயுவா என சம்சயம். கேவல வாயுவே என்பது முதல் பக்ஷம். ய: ப்ராண: ஸவாயு: என்று சொல்வதால்; இரண்டாவது பக்ஷம் - உச்ச்வாஸ நிச்வாஸ ரூபமான வாயுவின் க்ரியையே ப்ராணன் என்பது; இவற்றை நிரஸனம் செய்கிறூர்.

*நவாயுக்ரியே* - வாயு மாத்ரமோ அதன் க்ரியையோ அன்று: ப்ருதக் உபதேசாத் - "ஏதஸ்மாஜ் ஜாயதே ப்ராண: மனஸ்ஸர்வேந்த்ரியாணிச" - கம் வாயு: என்று வாயுவும், ப்ராணனும் ப்ரஹ்மத்திடமே உண்டாகின்றன வென்று தனித்தனியே சொல்வதால் என்றபடி. ஆகையால், தேஹதாரண யோக்யதாரூபமான விசேஷத்தையுடைய வாயுவே ப்ராணன் என்று ஸித்தம்.

இப்படி வாயுவைக் காட்டிலும் தனியாகச் சொல்லப்பட்ட அக்ன்யாதி களைப்போல வேறு ஒரு பூதமோ என்னும் சங்கையைப் பரிஹரிக்கிறூர்.

### 273 (ஸூ) சக்ஷுராதிவத்துதத் ஸஹ சிஷ்ட்யாதிப்ய: [9]

து சப்தம் சங்கையை நிவர்த்திப்பது. ப்ராணன் தேஜஸ் முதலியவை போல் பூதமல்ல; சக்ஷுஸ் (கண்) போன்ற இந்த்ரியங்கள்போல் ஜீவனுக்கு உபகரணமாகாது. *தத்ஸஹ சிஷ்ட்யாதீப்ய:* - உபகரணங்களான அவற்றுடன் சேர்த்து உபதேசம் செய்யப்பட்டிருப்பதால் ப்ராணஸம்வாதத்தில் - ஸர்வே ப்ராணா: அஹம் ச்ரேயஸே விவதமானு: என்று சக்ஷுராதி இந்த்ரியங்களையும் ப்ராணவாயுவையும் கூட்டி ப்ராண சப்தத்தாலே உபதேசிக்கிறது. சக்ஷு ராதிகளைப்போலே ப்ராணவாயுவும் உபகரணம் என்றவகையில் சமமானுல்தான் பொருந்தும். யோzயம் முக்ய ப்ராண: என்று ப்ராண சப்தத்தால் குறிப்பிடப் பட்டுள்ள கரணங்களுள் ப்ராணவாயு முக்யனென்று கூறியது ஸஹசிஷ்டி - ஆதிப்ய: என்ற ஆதிசப்தத்தின் பொருள்.

### 274 (ஸூ) அகரணத்வாச்ச ந தோஷ: ததாஹி தர்சயதி [10]

*அகரணத்வாச்ச தோஷோந* - ஜீவனுக்கு உபகரிக்கையென்னும் காரணம் இல்லாமையால் ப்ராணனுக்கு உபகரணத்வம் கூடாதென்ற தோஷமுமில்லை. *ததாஹி தர்சயதி* - யஸ்மின் உத்க்ராந்தே இதம் சரீரம் பாபிஷ்டதரமிவ

த்ருச்யதே ஸவை ச்ரேஷ்ட: என்னும் ச்ருதி தானே ப்ராணவாயுவுக்கு தேஹேந்-த்ரியாதி அசைதில்ய கரணரூபமான உபசாரத்தைக் காட்டுகிறது. ஆகையால் தோஷமில்லையென்பதாம்.

## 275 (ஸூ) பஞ்சவ்ருத்திர்மனோவத் வ்யபதிச்யதே [11]

ஒரே ப்ராணவாயுதான் ப்ராணாபாநாதி வ்ருத்திபேத மூலமாக ஐந்து பெயர்களால் குறிப்பிடப்படுகிறது. மனோவத் - ஒரே மனம் எப்படி காமனாதி வ்ருத்தி பேதத்தால் காமம் ஸங்கல்பம் விசிகித்ஸா ச்ரத்தா, அச்ரத்தா, த்ருதி, அத்ருதி, ஹ்ரீ ( வெட்கம் ), தீ ( புத்தி ), பீ ( பயம் ), என்றெல்லாம் வெவ் வேருகக் கூறப்படுகிறதோ, அப்படியே வாயுவும் ( ப்ராணன் ) ஐந்து இடங் களில் இருப்பைக்கொண்டு ப்ராணாபாநாதிகளின் பெயர்களால் குறிப்பிடப் படுகிறது. இந்தப் ப்ராணன் - வாயுவா அல்லவா என சம்சயம். ஸர்வ கதன் விபு என, பூர்வபக்ஷம். ஸ ஏபி: த்ரிபி: லோகை: ஸம: என்று ஆனந்த்யம் சொல்வதால் என்று பூர்வபக்ஷத்தின் ஹேது. இதை நிரஸிக்கிருர்.

## 276 (ஸூ) அணுச்ச [12]

த முத்க்ராமந்தம் ப்ராணோऽநூத்க்ராமதி என்று உத்க்ராந்தி சொல்வதால் இந்த்ரியங்கள் போலே ப்ராணனும் ஸூக்ஷ்ம பரிமாணமுள்ளது. த்ரிபி: ப்ராணே: சம: என்றது ப்ராணனைத் துதிப்பதேயன்றி வேறல்ல.

## ஜ்யோதிராத்யதிகரணம்

## 277 (ஸூ) ஜ்யோதிராத்யதிஷ்டானந்து ததாமனனுத் ப்ராணவதா சப்தாத் [13]

பராத்துதச்ச்ருதே: என்னும் அதிகரணத்தில் சொன்ன அர்த்தத்தையே இந்த அதிகரணத்தில் உறுதிப்படுத்துகிருர் என்று ஸங்கதி.

ப்ராணவதா - ப்ராணனின் நியந்தாவென ஜீவனுடன்கூட *ஜ்யோதி ராதீத்யதிஷ்டானம்* - அக்னியாதி தேவதைகளுக்கு வாகாதி - இந்த்ரியங்களில் அதிஷ்டானமானது, *ததாமநநாத்து* - ஆபிமுக்யேந மனனம் ஆமனனம் - ஸங்கல்பம் - அந்த பரம புருஷனின் ஸங்கல்பத்தாலேயே ஏற்படுகிறது என்று கருத்து. ஏனெனில், சப்தாத் - யோऽக்னௌ திஷ்டன் அக்னி மந்தரோ ய மயதி, ய ஆத்மனி திஷ்டன் இத்யாதி சப்தங்களாலென்றபடி.

## 278 (ஸூ) தஸ்யச நித்யத்வாத் [14]

தஸ்ய - ஸமஸ்த வஸ்துக்களும் பரமாதிஷ்டிதமென்பதற்கு, *நித்யத்வாச்ச* ஸ்வரூபாநுபந்தியாய் நியதத்வம் இருப்பதால்; ஆகவே, பகவத் ஸங்கல்பத்தால்

தானே அக்ன்யாதி தேவதைகளுக்கு இந்த்ரியாதிஷ்டாத்ருத்வம் தவிர்க்க முடியாதது ஆகிறது. தத்ஸ்ருஷ்ட்வா - ததேவானுப்ராவிசத் ததனுப்ரவிச்ய ஸச்சத்யச்சாபவத் என்று ஸர்வ நியந்தாவாய் இருந்து அனுப்ரவேசம் செய்தார் என்பது ச்ருதியிலிருப்பதால் என்று கருத்து.

## இந்த்ரியாதிகரணம்

## 279 (ஸூ) த இந்த்ரியாணி தத்வ்யபதேசாத் அந்யத்ர ச்ரேஷ்டாத் [15]

ஸர்வே ப்ராணா: என்று சக்ஷுராதிகளையும் ப்ராண வாயுவையும் ப்ராண சப்தத்தாலே சொல்லுகையாலே முக்ய ப்ராணனையும் இந்த்ரியமென்னலாம் என்பதைக் கண்டிக்கிறார். *ச்ரேஷ்டாத் அன்யத்ர* ச்ரேஷ்ட ப்ராணனல்லாத பிற ப்ராணங்கள் *த இந்த்ரியாணி* - அவையே இந்த்ரியங்கள் - *தத்வ்யபதேசாத்* - அவற்றையே அவ்வாறு வழங்குவதால் இந்த்ரியாணி தசைகஞ்ச - என்று முக்ய ப்ராணனைவிட்டு சக்ஷுராதி - மனம் வரையானவற்றையே இந்த்ரியம் எனக் குறிப்பிடுவதால் முக்ய ப்ராணனுக்கு இந்த்ரியம் என்ற பெயர் கிடையாது என்பதாம்.

## 280 (ஸூ) பேதச்ருதேர் வைலக்ஷண்யாச்ச [16]

ஏதஸ்மாஜ் ஜாயதே ப்ராணோ - மனஸ் ஸர்வேந்த்ரியாணிச என்று ப்ராணனையும் இந்த்ரியங்களையும் வேருகச் சொல்லுகையாலும், வைலக்ஷண்யாச்ச - இந்த்ரியங்கள் லயம் அடைந்தபிறகும் ப்ராண வ்யாபாரத்தைக் காண்கையாலே இவற்றிடையே வேறுபாடிருப்பதாலுமென்றபடி. இத்தாலும் ச்ரேஷ்ட ப்ராணனைத் தளிர்த்த ஏனைய சக்ஷுராதிகளே இந்த்ரியங்களென்று ஸித்தம்

## ஸம்ஜ்ஞா மூர்த்திக்லுப்த்யதிகரணம்

## 281 (ஸூ) ஸம்ஜ்ஞாமூர்த்தி க்லுப்திஸ்து த்ரிவ்ருத்குர்வத உபதேசாத் [17]

வியததிகரணம் முதல் இதுவரை 14 அதிகரணங்களாலே பூதேந்த்ரியாதிகளின் ஸமஷ்டி ஸ்ருஷ்டியை நிரூபித்து, இவ்வதிகரணத்திலே தேவ மனுஷ்யாதி வ்யஷ்டி ஸ்ருஷ்டியை இங்கு நிரூபிக்கிருரென்று ஸங்கதி.

ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியை சதுர் முகன் செய்கிருனு? சதுர்முக சரீரக பரமாத்மா செய்கிருனு என்று சம்சயத்தில் அனேந ஜீவேந ஆத்மநா அனுப்ரவிச்ய நாமரூபேவ்யாகரவாணி என்று ஜீவனைத்வாரமாகக் கொண்டு நாமரூபவ்யா கரணம் சொல்லுகையால் சதுர்முகனே வ்யஷ்டி ஸ்ருஷ்டியைச் செய்பவன் என்று பூர்வபக்ஷம். ஏனெனில், *த்ரிவ்ருத்குர்வத உபதேசாத்* - நாமரூபே வ்யாகர

வாணி தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதம் ஏகைகாம் கரவாணி என்று த்ரிவ்ருத் கரணம் பண்ணுபவனுக்கே நாம ரூபவ்யாகரணம் உபதேசிக்கையால், த்ரிவ்ருத் க்ருதங்களான தேஜோப் அன்னங்களால் உத்பன்னமான அண்டத்திலுள்ள சதுர்முகன் அந்தத்ரிவ்ருத்கரணத்தின் கர்த்தாவாகமாட்டான். த்ரிவ்ருத் கரணமும் வ்யஷ்டி ஸ்ருஷ்டியும் பரமபுருஷனுல்தான் செய்யப்பட்டன என்றுலே - வ்யாகரவாணி என்ற உத்தமபுருஷனும் (தன்மை யொருமை வினை முற்றும்) பொருந்தும் ஜீவேநாத்மனு என்ற ஸாமானுதிகரண்யமும் (விசேஷண விசேஷ்ய பாவமும்) முக்கியப் பொருளாகும். ஜீவேந ஆத்மநா-ஜீவசரீரகனுன என்னுல் என்று பொருள்.

ஆமாம். அன்னமசிதம் த்ரேதா விதீயதே எனத் தொடங்கி சதுர்முகன் படைத்த அன்னுதிகளிலும் த்ரிவ்ருத்கரண ப்ரகாரம் உபதேசிக்கப்படுகிறதே ஆகையால், அவனும் த்ரிவ்ருத்கரணம் செய்யச் சக்தன் தானே என்ற சங்கையைப் பரிஹரிக்கிருர்.

## 282 (ஸூ) மாம்ஸாதி பௌமம் யதாசப்தம் இதரயோச்ச [18]

மாம்ஸமும் மனஸ்ஸும் பௌமம் - பூமிசம்பந்தமுள்ளவை. அவை ஆப்யமோ தைஜஸமோ அல்ல. *யதாசப்தம்* - ஆப: பீதா; தேஜோZசிதம் என்று ச்ருதி சொன்னபடியே - *இதரயோச்ச* - அன்னம்மசிதம் என்ற ப்ரதம பர்யாயம் தவிர்த்த ஆப: பீதா: தேஜோZசிதம் என்ற இரண்டு பர்யாயங்களிலும் மூத்ர ப்ராணங்களுக்கு ஆப்யத்வமும், அஸ்தி மஜ்ஜைகளுக்கு தைஜஸத்வமும் உபதேசிக்கப்படுகின்றன. இதன் பொருளாவது.

தாஸாம் த்ரிவ்ருதம் என்று அண்ட ஸ்ருஷ்டிக்கென குறிப்பிடப்பட்ட த்ரிவ்ருத்கரணம் அன்னமசிதம் த்ரேதாவிதீயதே என்பதால் விதிக்கப்படவில்லை. ஆனுல், அண்டத்திற்குள் இருக்கும் ச்வேதகேது எளிதில் புரிந்து கொள்ள மனிதனுலே உட்கொள்ளப்படும் அன்னம், ஜலம் முதலியவற்றில் மூன்றுவகைப் பிரிவு கூறப்பட்டது. தஸ்யய: ஸ்தவிஷ்டோ பாக: தத்புரீஷம், யோமத்யம தந்மாம்ஸம்-யோZணிஷ்ட: தன்மன: என்று மாம்ஸமும் புரீஷமும் மனஸ்ஸும் போல் பௌமம் என்று உபதேசிக்கப்படுகிறது. ஏனெனில், அன்னமசிதம் த்ரேதாவிதீயதே என்று தொடக்கத்தாலும் அன்னமயம் ஹிஸோம்யமன: என்று வாக்ய சேஷத்தாலும் என்றபடி - தேஜோZபன்னங்களுக்குத் த்ரிவ்ருத் கரணப்ரகாரம் இதில் சொல்லப்படுகிறதெனில், மாம்ஸமும் மனஸ்ஸும், பௌமமானபுரீஷத்தைக் காட்டில் அணீயஸ்ஸாகையால் ஆப்யத்வமும் - தைஜஸத்வமும் ப்ரஸக்தமாகும். அவ்வாறே ஆப: பீதா: தேஜோZசிதம் என்ற இரு பர்யாயங்களிலும் லோஹிதம் மூத்ரம் ப்ராணன் இந்த மூன்றுக்கும்





ஆப்யத்வமும் தேஜ: பர்யாயத்தில் அஸ்தி, மஜ்ஜை, வாக்கு இவை மூன்றிற்கு தைஜஸத்வமும் சொல்லப்படுகிறது. ஏனெனில், பீதா: என்ற தொடக்க தாலும் ஆபோமய: ப்ராண: என்ற வாக்ய சேஷத்தாலும், அப்படியே தேஜோZசிதம் என்ற தொடக்கத்தாலும் தேஜோ மயீவாக் என்று வாக்ய சேஷத்தாலும் என்றபடி - இப்படியல்லாமல் த்ரிவ்ருத்கரணத்தை உபதேசி கிறதென்றால், மூத்ரம் ஸ்தவிஷ்டமாகையால் பௌமமாகிவிடும் - ப்ராணனு அணீயஸ்ஸாதலின், தைஜஸமாகிவிடும் - தேஜோZசிதம் என்ற மூன்று பர்யாயத்திலும் அஸ்தி - பௌமமாயும், மஜ்ஜை, ஆப்யமாயும் ஆகும் - உபக்ர வாக்ய சேஷங்களுக்கு விரோதம் வரும் ஆதலின், முன்பே த்ரிவ்ருத்க்ருதமா அன்னாதிகளுக்கு ஜாடராக்னியாலே மூன்று விதமாகப் பரிணாமம் உபதேசிக் படுகிறது. முன்பே த்ரிவ்ருத்க்ருதமானால், வெறும் அன்னம் முதலிய சொ களால் எப்படி வழங்கலாமென்பதற்கு விடைதருகிறார்.

## 283 (ஸூ) வைசேஷ்யாத்து தத்வாத: தத்வாத: [19]

து சப்தம் சங்கையை நிவர்த்திப்பதாம், வைசேஷ்யம் - விசேஷ பாக ப்ருதிவீஜலாதிகள் முன்னரே த்ரிவ்ருத் க்ருதங்களாயினும், ப்ருதிவீயில் த அம்சம் பாதியும் ஜலதேஜோZம்சங்கள் கால்காலும் உள்ளனவென்பதுபோ அந்தந்த பூதத்தில் விசேஷமானது தன்பாகம் ஆதலாலும் அன்னம், அப் தேஜஸ் என்று வ்யவஹாரம் ஏற்பட்டது. தத்வாத: என இருமுறை கூறிய அத்யாய முடிவைக் காட்டுவது. இங்கு ஸ்வாமி தேசிகன் "அநே ஜீவேந ஆத்மனா அனுப்ரவிச்ய" என்ற ச்ருதியும் அந்தராத்மா வே என்றும் - மற்றவன் சரீரம் என்றும் பேதத்தைக் கூறியிருப்பதால், ஜீவனுக்கு ப்ரஹ்மத்திற்கும் ஐக்கியத்தைக் கூறவில்லை. ஆதலின், எம்பெருமான் சேத சேதன சரீர விசிஷ்டஸ்வ பாவனாய் அனுப்ரவேசத்திலும் கர்த்தாவாகிற அனுப்ரவேசத்தில் கர்த்தா பின்னர் ஆவதால் 'த்வா' ப்ரத்யயம் ஜீவனுக்கு கர்த்ருவத்தைக் காட்டாது' என்றருளினார். ஒருவன் அனுப்ரவே செய்வதாயும் மற்றவன் வ்யாகரணம் செய்வதாயும் கர்த்தா வேறான ஸமானகர்த்ருகத்வம் இல்லாமையால் 'த்வா' ப்ரத்யயம் வராது என்பதா

## இந்தப் பாதத்தில் 8 அதிகரணங்களால் கூறப்பட்ட கருத்துக்கள்

1. ப்ராணாதிகரணத்தில் இந்த்ரியங்களின் உத்பத்தியும்
2. ஸப்தகத்யதிகரணத்தில் அவற்றிற்குப் பதினோரு எண்ணிக்கையும் (1
3. அணவ: என்ற அதிகரணத்திலே அவற்றின் பரிமாணமும்.
4. வாயுக்ரியாதிகரணத்திலே ப்ராணவாயுஸ்வரூபமும்.